# கல்கி

சுகாசினி கண்(ட) காட்சி!
ஜில்லென்று ஜூஸ்!



# கண்கள்...






## இவற்றினால் உணர்வுகளை வெளிப்படுத்துங்கள்

சிரிப்பு. மகிழ்ச்சி. சினம்.
சிருங்காரம். அத்தனையும்
சிறப்பாக எடுத்தியம்ப
முடியும்... சிங்கார் டீலக்ஸ்
கண்மையுண்ட உங்கள்
கண்களால். கருமைப்
பளபளப்பு மிக்கது
சிங்கார்—அடடா! எத்தனை
குளுமை... விசேடமான
தயாரிப்பு சிங்கார்
...ஆகவே அத்தனை
அழகு... கண்களுக்கு
எரிச்சல் இல்லாதது.






**சிங்கார்**

டீலக்ஸ் கண்மை

இது ஒன்றே கண்களுக்கு
நலமான கண்மை.

everest/83/SH/179-tm

# ஜில்லென்று ஜூஸ்

**ஆழ்வார்ப்பேட்டை வாசிகளான குமாரி சரஸ்வதியும், திருமதி விஜயலக்ஷ்மியும் குளிர்பானத் தயாரிப்புப் பற்றிச் சொல்கிறார்கள்.**

கோடைக்காலம் வரப்போகிறது என்னும் போதே எலுமிச்சம் பழ ரஸம் தயாரித்து வைத்துக் கொள்ளலாம். எவ்வளவு ஜூஸ் இருக்கிறதோ அதைப்போல் இரண்டு மடங்கு சர்க்கரை எடுத்துக் கொண்டு அதை நீரில் கரைத்து அடுப்பில் ஏற்றி உஷ்ணப்படுத்த வேண்டும். அது கம்பியாக வரும்பொழுது அடுப்பிலிருந்து இறக்கி விட்டு எடுத்து வைத்திருக்கும் எலுமிச்சம்பழ ரசத்தை அதில் கொட்டி நன்றாகக் கலக்க வேண்டும். இதில் சிறிது பிரசர்வேட்டிவ்வையும் கலந்தால் பல மாதங்கள் கெடாமல் இருக்கும்.

எலுமிச்சம் பழ ரசத்தை நீண்ட நேரம் வைத்தால் கசந்து விடும். அதனால் ஒரு சிட்டிகை உப்பைப் போட்டு வைத்தால் நல்லது.

**மாங்காய் ஜூஸ்:-**

பச்சை மாங்காய் கைவசம் இருந்தால் அதை நன்றாகத் தோலுடன் நெருப்பில் சுட வேண்டும். அப்படி சுடும் பொழுதே ஜூஸ் கொப்பளித்து வரும். அதை எடுத்துப் பிழிந்தால் கணிசமான அளவு ஜூஸ் கிடைக்கும். மாங்காய் தரத்துக்கு ஏற்ப நீர் சேர்த்துச் சர்க்கரை போட்டுப் பருகத் தரலாம். இதை அவ்வப்பொழுது தயாரித்துக் கொள்ள வேண்டும். வெய்யில் காலத்துக்கு உடம்புக்கு நல்லது.

**சிவப்பு ரோஜா ஜூஸ்:-**

சிவப்பு ரோஜாவை இதழ் இதழாக எடுத்து ஒரு பரந்த பாத்திரத்தில் போட வேண்டும். அது முழுவதுமாக நனையும் வகையில் எலுமிச்சம் பழச் சாற்றினை அதன் மேல் ஊற்றி நன்றாக மூடி வைத்து விட வேண்டும். இரவு முழுவதும் இப்படி ஊறினால் மறுநாள் காலை ஒரே சிவப்பு ஜூஸாக மாறியிருப்பதைக் காணலாம். ஒரு டம்ளர் ஜூஸுக்கு இரண்டு டம்ளர் சர்க்கரை என்ற விகிதத்தில் எடுத்துக் கொண்டு சர்க்கரையைக் கம்பிப்பாகாகச் செய்து இந்த ஜூஸை அதில் விட்டு நன்றாகக் கலந்து எடுத்து வைத்துக் கொள்ள வேண்டும்.

இது சிவப்பாக இருப்பதால் ஆப்பிள் பழத்தை அழகான வில்லைகளாகச் செய்து இதில் போட்டுக் கொடுத்தால் பார்க்க அழகாக இருக்கும்.





**தர்பூஸ் பழ ஜூஸ்:-**

இந்தப்பழம் ரொம்ப பேருக்கு பிடிக்காது. ஆனால் வெய்யில் காலத்துக்கு இது உடலுக்கு நல்லது. இந்தப் பழத்தின் தோலைச் சீவி, உள்ளே இருக்கும் விதைகளை எடுத்து விட்டுச் சிறிது நீர் ஊற்றி மிக்ஸியில் போட்டு ஜூஸ் எடுக்க வேண்டும். இந்த ஜூஸில் சிறிது சர்க்கரை சேர்த்துச் சாப்பிட்டால் மிகவும் ருசியாக இருக்கும். இந்தப் பழம் பிடிக்காது என்பவர்களைக் கூட இந்த ஜூஸின் சிவப்பு நிறமும் ருசியும் விரும்பிச் சாப்பிட வைக்கும்.

பேட்டி: குபிலி ராஜேஸ்வரி

**அட்டையில்:**

**பிரபல கிரிக்கெட் ஆட்டக்காரர் பரத்குமாரின் மனைவி ஸ்ரீகலா பரத்குமார் பரத நாட்டியக் கலைஞர். இல்லத்தை அலங்காரம் செய்யும் கலையும் பயின்றவர். சுவையாகச் சமைக்கத் தெரிந்த பட்டதாரி.**

**வண்ணப்படம்: உத்ரா**

# சுஹாசினி கண்(ட)காட்சி



ராஜஸ்தானி மணப்பெண்ணின் புன்னகை தன்னை மிகவும் கவர்ந்துள்ளதாகச் சொன்னார் சுகாசினி. ''அடேயப்பா! மூக்கில் எத்தனை பெரிய வளையம் மாட்டியிருக்கிறாள்!'' என வியந்தார்.

''வாழ்க்கையைச் சுமக்கத் தேவையான மனப் பக்குவத்தை மணப் பெண் நகை அலங்காரத்தைச் சுமந்தே உணர்த்துகிறாளோ'' என்கிற கேள்வியை எழுப்பியதுடன் தாமும் அந்த ராஜஸ்தானிப் பெண்ணைப் போலச் சிரிக்க முயன்றார்!



**சமீபத்தில் சென்னையில் நடைபெற்ற ராஜஸ்தான் நான்காவது அகில இந்திய புகைப்படக் காட்சிக்கு சுகாசினி, தந்தை சாருஹாசனுடன் விஜயம் செய்தபோது....**





''இந்தப் படத்தைப் பார்த்தால் என் சின்ன வயசு ஞாபகமெல்லாம் வருது. சின்னக் குழந்தைகளாக இருந்தாலும் அவர்களுடைய முகத்தில் எத்தனை அனுபவ முதிர்ச்சி அவன் முகவாயில் கை ஊன்றிக் கொண்டு போஸ் கொடுத்திருப்பது ரொம்ப ரொம்ப நேச்சுரல்!''



ராஜஸ்தான் பெண்மணி படத்தைச் சில நிமிடங்கள் உற்றுப் பார்த்துவிட்டுச் சொன்னார்:

''நடிகை சுமிதா பட்டேலின் சாயல் இப்படத்தில் தெரிகிறது. அவரைப் பக்கவாட்டில் படம் எடுத்தால் இப்படித்தான் இருப்பார். இப்படத்திற்கு நிச்சயம் பரிசு கொடுத்திருப்பார்கள்!''

''அவர் தலையில் சுற்றியிருக்கிற புடவையின் பார்டர் நன்றாக இருக்கிறது'' என்றும் சொன்னார்.











மகளுடைய ரசனையிலிருந்து மாறுபட்டு நின்ற சாருஹாசன் அத்தனை படங்களுக்கு நடுவே தேர்ந்தெடுத்தது கரும்பைக் கட்டோடு சுமந்து செல்லும் பெண்மணி படத்தைத்தான். காரணம் கேட்டால் ''கரும்பு கசக்குமா சார்?'' என்று ஜோக் அடித்து விட்டு ''உயிர் உள்ள படம். சிறப்பாக எடுக்கப்பட்டுள்ளது'' என்றார்.

இப்படத்தை எடுத்தவர் ஸ்ரீமதி கிரண் பார்கவா என்கிற பெண்மணி என்றதும் ''அப்படியா! அப்படியென்றால் பரிசு கிடைத்திருக்க வேண்டுமே'' என்றார்.

ஆம்! தகுதி நற்சான்றிதழ் பரிசு பெற்ற படம்தான் இது.

'உயரப் பறக்கும் பறவை!' படத்தை உற்றுப் பார்த்துவிட்டு, ''வனவிலங்குப் படங்களில் இந்தப் படம் எனக்கு ரொம்பப் பிடித்திருக்கிறது. பாலு மகேந்திரா கறுப்பு வெளுப்புப் படம் எடுத்தால் போட்டோகிராபி எப்படி இருக்கும் எனக் கற்பனை செய்து பார்க்க இது ஓர் உதாரணம்'' என்றார் சுகாசினி.

''இந்த உயரப் பறக்கும் பறவையைப் படம் பிடிக்க அந்தப் புகைப்படக்காரர் எவ்வளவு சிரமப்பட்டிருப்பார் என்பதை என்னைப் போல 'சினிமாடோகிராபி' படித்தவர்கள் நிச்சயம் உணர்வார்கள்.''

ஏற்பாடு, தொகுப்பு: திரைஞானி

புகைப்படங்கள்: சுபா




புல்லி— பஞ்சாப் ஆட்சி
கலிஸ்தான்— வன்முறை— ஒழிப்பது எப்படி?


ஆர்வி ஒழிக!
சிவாஜி ஒழிக!
ஆஹா! என்ன ஒற்றுமை! ஒழிக கோஷம் போடறதிலே எவ்வளவு ஒற்றுமை!


பாருங்க!.. பாருங்க!.. போலிஸ் நீதிபதியை ரகசியமா கண்காணிக்குது!
நீங்க ஒண்ணு டீ.வி. படம் தானே!

கல்கி



1983 மே 8
ருத்ரோத்காரி சித்திரை 25
மலர் : 41 இதழ் : 41



# உயிர்களுடன் விளையாடாதீர்கள்!

முன்பெல்லாம் காஸ் தயாரிப்பு நிறுவனங்கள் விளம்பரங்கள் மூலமும் இதர பிரசாரச் சாதனங்கள் மூலமும் இல்லத்தரசிகளுக்கு எச்சரிக்கை விடுப்பார்கள்:

✻ நெருப்புடன் விளையாடாதீர்கள்.

✻ காஸ் ஸிலிண்டரை ஜாக்கிரதையாகப் பயன்படுத்த வேண்டும்.

✻ உபயோகப்படுத்தாதபோது ஸிலிண்டர் திருகை அழுத்தமாக மூடிவைக்கவும். அடுப்பும் மூடியுள்ளதா கவனிக்கவும்.

✻ ரப்பர் டியூபில் ஓட்டை விழக் கூடாது; ஆபத்து.

✻ இலேசாக வாசனை வந்தாலும் ஜன்னல்கள், கதவுகளைத் திறந்து வைக்கவும். நெருப்பைக் கொண்டு போகவே கூடாது.

✻ அடுப்புக்கும் காஸ் ஸிலிண்டருக்கும் இடையில் ஒரு தடுப்புச் சுவர் இருப்பது நல்லது.

✻ காஸ் ஸிலிண்டரை நிபுணர்கள்தாம் மாற்றவோ சரி செய்யவோ வேண்டும். நீங்கள் உங்கள் திறமையை அதில் பரீட்சித்துப் பார்க்காதீர்கள்.

இவ்விதம் பலவாறாக எச்சரிக்கை விடுப்பார்கள். இப்போது நிலைமை தலைகீழாகி விட்டது. நாம்தான் காஸ் தயாரிப்பு நிறுவனங்களுக்கு எச்சரிக்கை விட வேண்டி யிருக்கிறது!

✻ அடிக்கடி விலை ஏற்றுகிறீர்கள். விலையை ஏற்றிவிட்டு அளவையும் குறைப்பது நியாயமே யல்ல.

✻ சரி, விலையைத்தான் ஏற்றுகிறீர்கள். தரமான, உறுதியான ஸிலிண்டர்களை அனுப்பக் கூடாதா?

✻ காஸ் ஸிலிண்டர்கள் ஆபத்தானவை. அவற்றை அக்கறையோடு தயாரியுங்கள்.

✻ முன்பு போல் திருகு வால்வ் போட்டு ஸிலிண்டர் உருவாக்குங்கள்.

✻ ''ரெகுலேட்டர் வால்வுகள் ஸிலிண்டருடன் நீக்கமற இணைந்ததாகவே இருக்க வேண்டும்'' என்ற பரிந்துரையை நினைவில் கொள்ளுங்கள். அதைச் சட்டமாகப் பாவியுங்கள்:

✻ இப்போது புதிதாக வரும் ஸிலிண்டர் ரெகுலேட்டர் வால்வுகள் தொட்டால் கழன்று கொள்ளக் கூடியவை; பட்டால் உடையக் கூடியவை. இப்படிப்பட்ட ஸிலிண்டர்களை அனுப்பி இல்லத்தரசிகளைச் சோதிக்காதீர்கள்.

✻ காஸ் ஸிலிண்டர் விபத்துக்கள் பற்றி அடிக்கடி கேள்விப்படுகிறோம். பயமா யிருக்கிறது. கவலை எங்களுக்குக் குடல் புண்ணைக் கொடுத்து விடும்போலிருக்கிறது.

✻ மனைவியும் மக்களும் எமக்கு உயிரினும் மேலானவர்கள். அவர்களை அடுப்பங்கரைக்கு அனுப்பவே அஞ்சுகிறோம்.

✻ ஐயா காஸ் தயாரிப்பாளர்களே! 'நெருப்புடன் விளையாடாதீர்கள்' என்றும் 'ஸிலிண்டரில் விளையாடாதீர்கள்' என்றும் எங்களை முன்பு எச்சரித்த கருணாமூர்த்திகளே, உங்களைக் கரம் கூப்பிக் கேட்டுக் கொள்ளுகிறோம்: மனித உயிர்களுடன் விளையாடாதீர்கள்.

---

தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா -பாரதியார்

**ப**த்மா சின்ன வயதில் சிறகிழந்த பறவையாகச் சித்தி சிற்றப்பாவோடு சென்னைக்கு ரயிலில் வந்தபோது அவள் மனம் கண்ணீரில் ஊறி, வேதனையால் வெந்து கொண்டிருந்தது.

நள்ளிரவில் ரயில் 'உ..ஊ' என்று ஊளை எழுப்பியபடி சின்னப் புகைவண்டி நிலையங்களை அலட்சியம் செய்துவிட்டு, பாலத்தை 'டொம டொம் டொம டொம்' என்று கடந்தது.

சிற்றப்பா உயரத்தில் உறங்கினார். சித்தி 'லோயர் பெர்த்'தில் புன்னகை செய்கிற பாவனையில் லேசாய் வாய் திறந்து 'கர்ர்ர்' என்று குறட்டை விட்டாள். அடியில் பத்மா கொட்டக் கொட்ட விழித்துக் கொண்டு

மூன்று பெண்கள் உட்பட இருபத்தைந்து ஆசிரியர்கள் பல்கலைக் கழகத் தேர்வுகளில் காப்பி அடிக்கும்போது பிடிபட்டனர். அப்போது அந்த ஆசிரியர்கள் வேலூரில் நடந்த மதுரை காமராஜ் பல்கலைக் கழகத் தேர்வுகள் எழுதிக் கொண்டிருந்தனர்!

—பாஸ்கர்



மூட்டை முடிச்சுக்கிடையே சுருண்டிருந்தாள். அவள் எண்ணமெல்லாம் அப்பா, அப்பா, அப்பா.

இனிமேல் உங்களை நான் பார்க்கவேமுடியாதா? இந்த உலகத்திலே நீங்க இல்லவே இல்லையா?

போன தீபாவளியன்னிக்கு என்கூட நின்னு, என் கையைப் புடிச்சுக்கிட்டுப் பட்டாசுச் சரம் கொளுத்தினீங்களே. போன மாசம் ரயில்வே ஸ்டால்ல நான் போதும் போதும்னு சொல்லியும் கேக்காம 'குழந்தைக்கு இன்னொரு ஜாங்கிரி குடுய்யா'ன்னீங்களே. முருகன் பலகார வண்டிய வீட்டு வாசல்ல நிறுத்தி மணியடிக்கிற நேரங்கள்ல நான் தவறும மிக்சர் வாங்க பர்ஸிலேர்ந்து நாலணா எடுத்துத் தந்தீங்களே.

இப்ப எப்படி நீங்க இல்லாமப் போனீங்க? இனிமே நீங்க ஒரு நாளும் வரவே மாட்டீங்களா? பத்மா பத்மான்னு கூடத்தில நின்னு கூப்பிட மாட்டீங்களா? ரயில்வே லைன் பக்கமா ரோஜாத் தோட்டத்துக்கு வாக்கிங் அழைச்சுக்கிட்டுப் போக மாட்டீங்களா?

நான் படிச்சு ஆபீசராகி கார்ல உங்களை உக்கார வெச்சு அழைச்சுக்கிட்டுப் போகணும்னு ஆசைப்பட்டீங்களே. இவ அப்படியெல்லாம் கார் வாங்க மாட்டான்னு முடிவு பண்ணி என்னை விட்டுட்டுப் போயிட்டீங்களா?

உங்களை எரிச்சப்ப எப்படிப் பொறுத்துக்கிட்டீங்க? கொஞ்சம் கூட வலிக்கலியா? உங்க காதுக்குப் பின்னால இருந்த பெரிய மச்சம், உங்க கையில இருந்த பச்சைத் தாமரைப் பூ, உங்க பேச்சு, உங்க சிரிப்பு எல்லாமே எரிஞ்சு போயிருச்சா? என்னால நம்பவே முடியலயே அப்பா, மனுஷங்கள்லாம் இப்படித்தான் திமர் திமர்னு ஒரு நாள் இல்லாமப் போயிருவாங்களா?

சித்தியின் வீட்டுக்கு வந்து சேர்ந்தபோது வருத்தம் நிறைந்த தனிமை உணர்வு பத்மாவைத் தாக்கியது. கட்டடங்கள் அடர்ந்து தந்தி மின் கம்பங்களும் சினிமா பானர்களும் இஷ்டத்துக்கு முளைத்து, கான்க்ரீட்டும் இரும்பும் மண்டிய சென்னைக் காடு அவளுக்குள் வித்தியாசமான பயங்களைத் தோற்றுவித்தது. அப்பாவுடன் வாக்கிங் போய்ச் சுத்தக் காற்றைச் சுவாசித்தவள், தூசி, கரி, டீசல் புகையினால் மூச்சுத் திணறினாள்.

சித்தி, ''அறிவு கெட்ட கழுதை, சோப் விக்கிற விலையில ஒரு பாவாடையத் துவைக்கிறதுக்கு ஒரு சோப் கட்டிய கரைச்சிருக்கியே. நாளையிலேர்ந்து உன் துணிகளைச் சும்மா அடிச்சுக் கசக்கிப் போடு. சோப் கிடையாது'' என்று சீறினாள்.

'இல்லே சித்தி உங்க புடவையைத் துவைச்ச பிறகு மிச்சமிருந்த சோப்பைத் தான் என் பாவாடைக்குப் போட்டேன்.' என்று வாய் திறந்து உண்மையைப் பேசப் பத்மா பயந்தாள்.

''அரிசி உளுந்தைக் களைஞ்சு தோசைக்கு அரைச்சு வை. நேத்து மாதிரி குருணை குருணையா வழிச்சு வெச்சே கொன்னுடுவேன்'' என்றபடி சித்தி முகத்தில் பவுடரை அடித்துக் கொண்டாள். பக்கத்து வீட்டு சரோஜாவுடன் மத்தியானக் காட்சியில் 'பாசம்' பார்க்கப் புறப்பட்டாள்.

பத்மா ஏழாவது வந்தாள். சிற்றப்பா ஆசிரியர் பணியிலிருந்து ஓய்வு பெற்றார். வீட்டுத் திண்ணையில் லாட்டரிக் கடையைத் திறந்தார். பத்மா ஒரு நாள் ஜுரத்தால் சுருண்டு கிடந்தாள். அவர், ''பட்டினி பரம ஔஷதம்னு சொல்லுவாங்க. கேள்விப்பட்டது இல்லையா? வெறும் வயித்தோட அவளைப் படுக்கவை. ஜுரம் விட்டுரும். டாக்டர் கிட்டக் கொண்டு போய்அஞ்சையும் பத்தையும் அழ இங்கே யார் கிட்டக் கொட்டிக் கிடக்குது'' என்றார், சித்தியிடம்,

எட்டாவது வகுப்பில் பக்கத்தில் இருந்த பல் நீண்ட மல்லிகா தேறியக் கொடிக்காகப்

# நேசமுள்ள வான்சுடரே

சவீதா



பத்மா ஜியாமெட்ரி பாக்சில் வைத்திருந்த பத்துப் பைசாவைத் திருடினான். பத்மா அதை வெளியே சொல்லப் பயந்தாள். ராமராஜ் வாத்தியார் கொடிக்குக் காக கொடுக்காத பத்மாவை ஸ்கேலால் அடித்து வெய்யிலில் உலர்த்தி யெடுத்தார்.

உலகத்தில் உள்ள எல்லோருமே கொடூர மானவர்களாகவும், அன்பில்லாதவர்களாக வும் தோன்றினர். எல்லோருடைய பார்வை யிலும் எதிர்ப்பும் பகை உணர்வும் தெரிந்தன. ஆரவாரம் நிறைந்த உலகம் ஒரு புறமும், அவள் மட்டும் தன்னந் தனியாக எதிர்ப் புறமும் நிற்பதைப் போல உணர்ந்தாள். அவள் இதழ்கள் சிரிப்பை மறந்துவிட்டன. தன் ஆசைகளையும் தேவைகளையும் ஏக்கங் களையும் வெளியிட முடியாமல் தன்னைச் சுற்றி மௌன வேலி அடித்துக் கொண்டு ஊமையானாள்.

வருடங்கள் புரண்டபோது அவள் வளர்ந் தாள். 'எனக்கு அம்மா இல்லை, உடன் பிறந் தவர்கள் இல்லை, என்மீது அக்கறை காட்டும் நண்பர்கள் கிடையாது, சாப்பிட்டியா என்று விசாரிக்க யாருமில்லை.' என்று அடிக்கடி வருந்தியதால் தனிமை உணர்வும் அவ ளோடு சேர்ந்து வளர்ந்தது.

மருத்துவக் கல்லூரி விடுதியில் டெய்சி அறைத் தோழியாக வந்தாள். தனிமை யுணர்வு அவளை விட்டு ஓரளவு அகன்றது.

சூரியன் கோடிக் கணக்கான கதிர்க் கரங்களால் மரங்களை ஊடுருவிக் கல்லூரிக்குள் நிழல் வலைகளைப் பின்னுகிற காலை வேளை களில் ராம்குமார் பைக்கை பக்கத்தில் நிறுத்தி ''ஹலோ ஹவ் ஆர் ''யு'' என்று நிஜமான அக்கறையோடு விசாரித்தது அவளிடம் மிச்சமிருந்த தனிமை யுணர்வையும் விரட்டி யது.

ஆய்வுக் கூடத்தில் அவன் வளர்த்தியாக எதிரே நின்று, பிப்பெட்டையும் பியூரெட் டையும் கையாண்டு, பிங்க் திரவத்தை நிறமற்ற திரவத்தில் கரைத்தான். வாழ்க்கை அவளுக்கு மகிழ்ச்சிகரமான வண்ணங்கள் நிறைந்ததாகத் தோன்றியது.

கல்லூரி நூலகத்தில் ஃபிஸிக்ஸ் புத்தகம் அகப்படாமல் ஏமாற்றத்தோடு ஹாஸ்டலை அடைந்தபோது, ஆண்கள் விடுதியின் தோட்டக்காரன் கன்னியப்பன் ''ராம் சார் குடுத்தார்'' என்று அவள் தேடிய ஃபிஸிக்ஸ் புத்தகத்தைக் கொடுத்தான். 'வாழ்க்கை மிகவும் அழகானது, அர்த்தச் செறிவுள்ளது' என்று எண்ணினாள்.

முதல் ஆண்டு முடிந்து ஒரு மாத விடு முறை வந்தது. அவளுக்கு விடுதியை விட்டுச் செல்ல மனமே இல்லை. டெய்சி விருது நகருக்குப் புறப்பட்டாள். ராம்குமார் கொடைக்கானலுக்குச் சென்று விட்டான். பத்மா ஆயிரம்விளக்கிலிருக்கும் சித்தி வீட் டுக்கு அரை மனத்துடன் வேறு வழியின்றிச் சென்றாள்.

புல்லின் விளிம்பில் தவமிருந்து காலைக் கதிருக்காக இரவெல்லாம் கனவு காணும் பனித் துளியைப் போல் கல்லூரி மறுபடியும் தொடங்கும் நாளை ஆவலோடு எதிர் பார்த்தாள்.

முதல் நாளன்று காலை ராம்குமாரைப் பார்க்க முடியாததால் தாங்க முடியாத ஏமாற்றம். உற்சாகம் ஒரே நொடியில் விலக, பலவீனமடைந்து சோர்ந்தாள். பல நாட்கள் தலைமறைவாகி யிருந்த தனிமை யுணர்வு, ரயிலில் கொட்டக் கொட்ட விழித்துக் கொண்டு சித்தி, சிற்றப்பாவுடன் சென்னைக்கு ரயிலில் வந்தபோது நள்ளிரவில் முதல் முதலாக அனுபவித்த அதே தனிமை யுணர்வு அவளை மூர்க்கத்தனமாகத் தாக் கியது.. பரிசோதனைக்காகத் தரப்பட்ட உடம் பின் கரத்தில் பச்சை குத்தப்பட்டிருந்த பூ அப்பாவை நினைவூட்டியது. தலையில்லாத அந்த உடலுக்கு ஒரு கணம் அப்பாவின் முகத்தைப் பொருத்திப் பார்த்தாள். அவள் மனம் படபடவென்று அடித்துக் கொண்டது. அப்பாவேதான்.

அந்த அப்பாவின் கரத்தை டியூட்டர் கத்தியால் கீறியபோது அவள் இதயத்தைக் கிழிப்பதைப் போன்ற வேதனை.

ஏமாற்றம், பலவீனம், சோர்வு, தனிமை யுணர்வு, வேதனை எல்லாமாகச் சேர்ந்து அவள் நெஞ்சுக்குள் புழுக்கத்தையும், நெரிசலையும் ஏற்படுத்தவே மூர்ச்சையடைந் தாள்.

முற்பகல் வெளிச்சத்தில் கல்லூரியின் காண்டீன் கலகலவென்று இருந்தது. வெள் ளைக் கோட்டை மடியில் அணைத்துக்கொண்டு மாணவிகள் சிரித்தனர். ஸ்டெத்தைத் தோளில் தொங்க விட்டிருந்த மூன்றாவது வருட



சமீபத்தில் ஆந்திர முதலமைச்சர் திரு என். டி. ராமராவை ஒரு விஷயமாகப் பார்க்க வேண்டியிருந்தது. முதல்வரின் உதவியாளரிடம் தொலைபேசியில் ''இந்த விஷயமாக முதல்வரைப் பார்க்க விரும்புகிறேன்'' என்றேன். ''வாருங்கள்'' என்றார் அவர். செக்ரடேரி யட்டில் சரியாக 3.05க்கு நுழைந்தேன். உதவியாளரைப் பார்த்து விஷயத்தைச் சொன்னேன். என்னை உட்கார வைத்தார். அடுத்த ஐந்து நிமிடத்தில் என்னை முதல் வரிடம் அழைத்துச் சென்றார். வந்த விஷயத்தைப் பற்றி முதல்வரிடம் பேசிக் கடிதத்தைக் கொடுத்துவிட்டு வந்தேன். இவர் நிச்சயமாக ஒரு மாறுபட்ட முதல்வர் தானே!

—எஸ். சந்திரசேகர்

மாணவர்கள் அரட்டை அடித்தனர். புகை யெழுப்பினர். ஓரத்து மேஜையில், வேக மாகச் சுழன்ற மின் விசிறிக்கு நேராகக் கீழே பத்மா சாய்ந்தபடி இருந்தாள்.

டிஸெக்ஷன் ஹாலில் அவள் மயங்கிச் சாய்ந்தபோது நல்ல வேளையாக டெய்சி தாங்கிப் பிடித்துக் கொண்டதால் காயம் எதுவுமில்லை. குளிர்ந்த நீரை அடித்ததால் சோளியும் புடவையும் கழுத்துக்குக் கீழே நனைந்திருந்தன.

பக்கத்தில் இருந்த டெய்சி, ''ஏண்டி இவ்வளவுதானா உன் தைரியம்?'' என்றாள். ''சாவு வீட்டுக்குப் போனேன்னா உடம்பைக் கிடத்தியிருக்கிற பக்கம் மறந்து கூட நான் திரும்பிப் பார்க்க மாட்டேன். ரோட்டில பாடை வந்தா முகத்தை வேற பக்கம் திருப்பிக்குவேன். அந்தக் காத்தே எம்மேலே படக் கூடாதுன்னு மூச்சு விடறதக்கூட கொஞ்ச நேரத்துக்கு ஒத்திப் போட்டுரு வேன். இல்லே பக்கத்துச் சந்து வழியே ஓடிருவேன். சாவுன்னா எனக்கு அவ்வளவு பயம். நானே இன்னிக்குத் துணிஞ்சுட்டேன். உனக்கு என்னடி வந்தது?''

பத்மா பேசாமலிருந்தாள். பயமும் படபடப்பும் முற்றிலுமாக அவளை விட்டு விலக வில்லை. தலை துண்டிக்கப்பட்ட அந்த உடல் அவள் விழிகளை விட்டு அகல மறுத்தது.

''டிடினெஸ் இன்னும் போகலியாடீ?''

''இப்ப ஒண்ணுமில்லே.''

''காபிய சூடாக் குடி. எல்லாம் சரியாப் போயிடும்.''

பலவீனமாக நடுங்கிய கரத்தினால் 'கப்'பை எடுத்தாள். இதழருகே கொண்டு போனாள். அப்போது டெய்சி ''இன்னும் ஒண்ணரை வருஷத்துக்கு அந்தத் தலையில்லாத மனுஷன் முகத்திலதான் நாம் காலங்காத்தாலே முழிச் சாகணும்.'' என்றாள்.

காபியைப் பருகப் போன பத்மா 'உப்' பென்று வாந்தி எடுக்கிற மாதிரி குமட்டிய படி 'கப்'பைக் கீழே வைத்து விட்டாள்.

''சரி, அவனைப் பத்தி நான் இனிமே பேசலே. அந்தக் காப்பி ஆறிருச்சு. அத இப்படிக் குடு.''

டெய்சி அதை எடுத்துப் பருகினாள். சர்வர் பக்கத்தில் வந்தான். ''இன்னொரு காஃபி ஹாட்டா'' என்றாள்.

பக்கத்து மேஜையிலிருந்த மாணவர்கள் பிஸ்கட்டைக் கடித்தனர். ஹைப்பர் டென்சில் கார்டியக் ஃபெய்லியருக்கு ஏன் ப்ரொப்ரனலால் கொடுக்கக் கூடாது என்பது பற்றியும், ஷர்மிளா டாகுர் நடிப்பைப் பற்றியும் தீவிரமாக விவாதித்தனர். டைபீரியஸ் சீஸருக்கு இருட்டில் கண் தெளிவாகத் தெரிந்ததைப் பற்றிச் சரித்திர, மருத்துவ ஆதாரங்களோடு பிரஸ்தாபித்தவன், ஆப்த மாலஜியில் ஸ்பெஷலைஸ் பண்ண முடிவு செய்தவன்.

டெய்சி, ''அங்க பாருடி. சீக்கிரமாப் பாரு'' என்றாள். பத்மா தலையைத் திருப்பினாள். ஜன்னலுக்கு வெளியே காலை வெய்யிலில் ராகிங்கிற்கு ஆளான பத்துப் புதிய மாணவர்கள் மூத்த மாணவர்களின் விபரீதமான விருப்பப்படி லெப்ட் ரைட் போட்டு

## வாசகர் கருத்து

● முத்தையனின் பிரிவைக் கல்யாணியும் அபிராமியும் எப்படி தாங்க முடியாமல் கண்ணீர், விட்டார்களோ அதை விட அதிகமாக 'கள்வனின் காதலி' முற்றும் என்பதைப் படித்தபோது வருந்தினேன்.
தூத்துக்குடி. இரணியல்'கலை.

● 'கள்வனின் காதலி' ஓர் அற்புதமான காவியம். 51–ம் அத்தியாயத்தில் அமரர் கல்கி அவர்கள் எங்கள் நெஞ்சத்தைப் பிழிந்தெடுத்து விட்டார். கல்யாணியும் எங்கள் இதயத்தில் குடிபுகுந்து விட்டாள்.
மே. மாம்பலம். எஸ். மோகன்.

● கள்வனின் காதலி, கடவுளின் காதலியாக மட்டுமல்ல, அமரர் கல்கியின் அற்புதமான எழுத்துக்களால் வாசகர்களின் காதலியாகவும் மாறிவிட்டாள். நிகழ்ச்சிகளைத் தத்ரூபமாகக் கண்முன்னே நிறுத்துவதில் 'கல்கி'யின் எழுத்துக்களும் 'மாருதி'யின்




படங்களும் போட்டிப் போட்டன.
ஸ்ரீரங்கம். எம். உஷா.

● முத்தையன் தன் உள்ளம் அறிந்து ஒரு தவறும் செய்யவில்லை. சூழ்நிலை அவனைக் கள்வனாக்கி விட்டாலும் அவன் எங்கள் உள்ளத்தில் என்றென்றும் நீங்கா இடம் பெற்று விட்டான்.
கதிரிமங்கலம் வி. ரங்கநாதன்.

● கள்வனின் காதலி நாளடைவில் கடவுளின் காதலி ஆனாள் என்ற கடைசி வரி என் இதயத்தைக் கசக்கிப் பிழிந்து விட்டது. இது மாதிரியான ஒரு கதையை என் வாழ்நாளில் படித்ததே கிடையாது.
வேலூர் (சேலம்). கவிப்ரியா.

● அமரர் கல்கியின் கள்வனின் காதலி என் மனத்தில் அமர காவியமாக இடம் பெற்று விட்டது.
காட்டூர் எஸ். அருள்மொழி.

ஒரு வகுப்பிலிருந்து இன்னொரு வகுப்பிற்குச் சென்றனர். பத்மாவின் இதழ்கள் முதல் முறையாகப் புன்னகையால் நெளிந்தன.

கோக் புட்டியைக் கையில் பிடித்து உறிஞ்சியபடி உள்ளே வந்தவன் உட்கார்ந்திருந்தவர்களில் ஒருவனைப் பார்த்து ''கன் ஜெனிடல் சிபிலிஸ்க்கு என்னென்ன ஃபீச்சர் சொல்லுடா'' என்றான்.

''முன்னம் பல் ரெண்டும்.''

''முன்னம்பல் ரெண்டையும் மூடிக்கிட்டு நான் சொல்றதைக் கேளு. நம்பர் ஒன் ஹச்சின்ஸன்ஸ் டீத். நம்பர் டு....''

''கிளம்புங்கடா கிளாசுக்கு டைம் ஆகலே?''

''ஆமடா. பூராலஜி கிளாஸ். மிஸ் பண்ணிட்டா டாபிக் போயிடும்.''



''இன்னிக்கு என்னங்க ஆபீசுக்கு அதிசயமா பேறு கொண்டு போறீங்க!''
''சம்பள நாளாச்சே, கையெழுத்துப் போட வேணுமா!'' -பாதுஷா

''யூராலஜியா! சினிமா பாக்கலாம்டா!''

உற்சாகமாகக் கலைந்தனர். அவர்களைப் பார்த்து பத்மா பொறாமைப்பட்டாள். மனித உடம்பை அறுத்துத் தோண்டிப் பார்த்து அனாடமி கற்றுக் கொள்ள இவர்கள் பயந்திருந்தால், மூன்றாவது அல்லது நான்காவது ஆண்டுக்கு எப்படி வந்திருக்க முடியும்? நான் மட்டும் ஏன் இப்படி முதல் நாளே புறமுதுகிட்டு ஓடி வந்திருக்கிறேன்?

புதிய கும்பல் உள்ளே நுழைந்தது. சூடாக வந்த காப்பியைப் பத்மா பருக முயற்சி செய்தாள். முடியவில்லை. ''வாந்தி வருதுடி. என்னை விட்டிரு.''

''சரி, பின்னே கிளம்பு.''

''எங்கே?''

''ஹாஸ்டலுக்குத்தான். ரெஸ்ட் எடுத்துட்டு நாளைக்கு ஃப்ரெஷ்ஷா வா. நடந்துருவேல்ல?''

''நான் போயிருவேன் டெய்சி. நீ கிளாசுக்குப் போ. என்னால உன் படிப்பு வேற கெடுது.''

''அரை மணி நேரத்துல ஒண்ணும் குடி முழுகிப் போயிராது. வா. உன்னைக் கொண்டு போய் ரூம்ல படுக்க வெச்சுட்டு வந்தாத்தான் எனக்கு நிம்மதி இருக்கும்.''

பகல் பொழுதை அறைக்குள்ளே படுக்கையில் புரண்டபடி கழித்தாள், பத்மா. அவள் மனம் நினைவுக் காடுகளில் திசை தெரியாமல் திரிந்தது.

ராம்குமார் ஏன் வரவில்லை என்று யோசித்துக் குழம்பினாள். டிஸெக்ஷன் ஹாலில் காலையில் பார்த்த உடல்கள் அடிக்கடி நினைவுக்கு வந்து குமட்டலை ஏற்படுத்தின. பசி சுத்தமாக இல்லை. சாப்பாடு செல்லாது போலத் தோன்றியது. எனவே மெஸ்ஸுக்குக்கூட எழுந்து செல்லவில்லை.

வெய்யில் கொளுத்திய பிற்பகல் வேளையில் அவளையறியாமல் சிறிது நேரம் உறங்கினாள். ஆண்கள் விடுதியின் மூன்றாவது மாடியறையில் தாளமடித்துக் கொண்டு, உரத்த குரலில், ''துணையில்லாத வாழ்வினிலே சுகம் வருமா...'' என்று தேவநேசன் பாட ஆரம்பித்ததும் கண் விழித்தாள். மணி ஐந்து.

தேவநேசன் குரலில் பி. பி. ஸ்ரீநிவாசின் ஆண்மையும் ஏ. எம். ராஜாவின் குழைவும் அபூர்வமாக இணைந்திருந்ததைப் பத்மா எப்போதும் ரசிப்பதுண்டு. தேவநேசனின் கச்சேரியால் பெண்கள் விடுதியின் பல ஜன்னல்கள் விரியத் திறப்பதுமுண்டு. சில இறுகச் சாத்தப்படுவதுமுண்டு. பத்மா பின் ஜன்னலைத் திறந்து பாடலை வரவேற்றாள்.

''...தனிமையிலே இனிமை காண முடியுமா
நள்ளிரவினிலே சூரியனும் தெரியுமா...''

சோப்பையும் டவலையும் கையில் எடுத்தாள். நாளையும் டிஸெக்ஷன் ஹாலில் மயக்கம் வருமோ? அப்படி வந்தால் என்ன செய்வது? மருத்துவப் படிப்புக்கு லாயக்கற்றவள் என்று கல்லூரியை விட்டு வெளியேற்றி விடுவார்களோ?

சித்தப்பா நட்டச்சு பழகச் சொல்லுவார். சித்தி நாள் தவறாமல் இட்லிக்கு மாவு போடுவாள். அந்தச் சிறைச்சாலைக்குத் திரும்பிச் செல்வதை விட டிஸெக்ஷன் ஹால் பிணங்களுக்கிடையே மயங்கி விழுந்து சாவதே மேல்.

குளியலறைக்குச் சென்றாள். முகத்தைக் குளிர்ந்த நீரால் அலம்பினாள். சிறிது புத்துணர்ச்சி கிடைத்தது. அறைக்குத் திரும்பி வந்தாள். அவளை நோக்கி வேகமாக வந்த ஹவுஸ் கீப்பர், ''உங்களுக்காக அவர் காத்துக்கிட்டிருக்கார்'' என்றாள்.

ஹவுஸ் கீப்பர் கைநீட்டிய திசையில் பத்மா பார்த்தாள். விழிகள் பெரிதாக விரிந்தன. இதயம் படபடவென்று அடித்துக் கொண்டது.

விடுதிக்கு வெளியே வேப்ப மரத்தருகே பச்சை ராஜ்தூத் நின்றது. பக்கத்தில் வளர்த்தியாக ராம்குமார்!

(தொடரும்)



# ஞாபக நரைகள்

*வைரமுத்து பக்கம்*

கிராமத்துக்குத் திரும்பி வந்த கிழவன், ஓடைக்கரை வழியே தன் பழைய காதலியின் புதைகுழியைத் தேடிப் போகிறான். ஒற்றையடிப் பாதையில் ஓர் ஒரு மனித ஊர்வலம்!

சாபங்கள் பெற்றகுயில் — இன்று
  சந்திக்க வருகிறது
ஞாபக வெளிகளிலே — இந்த
  நரைநதி நகர்கிறது.

சுற்றுப் புறத்திலெல்லாம் — இங்கே
  சூன்யம் வசிக்குதடி
வற்றிப் போனதனல் — நதிக்கும்
  வழுக்கை விழுந்ததடி.

அந்த இளந்தென்னை — மரத்தின்
  அடியில் இழந்தென்னை(த்)
தந்து தவித்திருந்தேன் — இன்று
  தனியே நினைத்தழுதேன்.

இருதயம் கண்களிலே — இன்று
  ஏறித் துடிக்குதடி
இருவிழி நீர்உதிர்க்கும் — அதற்கு
  இரத்த அடர்த்தியடி.

ஓடைக் கரைமலர்கள் — மண்ணில்
  உதிர்ந்து புதைந்ததென்ன?
பேடைக் குயில்நினைவு — என்னைப்
  பிழிந்து வதைப்பதென்ன?

உன்னைநான் வென்றுகின்றேன் — நெஞ்சில்
  ஒருலட்சம் பூமரங்கள்!
சின்னஎன் ஜீவனுள்ளே — இதுவரை
  சேமித்த ஞாபகங்கள்.

போராடும் எண்ணங்களே! — இந்தப்
  புலம்பல் என்னமொழி?
காராடு மேய்ப்பவனே! — இங்கு
  காட்டுக்கு எந்தவழி?

சிதைகள் எரிகையிலே — நான்என்
  ஜீவனைத் தேடுகிறேன்.
புதைத்த குழிகளிலே — நான்என்
  புதையலைத் தேடுகிறேன்.

'காவல்காரர்களே — எதுஎன்
  கனவுகள் துயிலுமிடம்?''
''நாவல் மரத்தடிதான் — அந்த
  நாகம்மா புதைந்த இடம்.''

கவலைஎன் கண்களிலே — வந்து
  கண்ணீர் தெளிக்குதடா!
அவளென் நெஞ்சினுள்ளே — புதைந்து
  அறுபது வருஷமடா!

புகைப்படம்: உத்ரா

# பல்வேறு பற்குச்சிகளின் பலன்கள்

ஆலும் வேலும் பல்லுக்கு உறுதி தருபவை. நாயுருக்குச்சி தைரியத்தையும், மேதையையும், அறிவையும், மென்மையான குரலையும் தரும். மாதுளங்குச்சி, வெட்பாலைக்குச்சி, மருதம்குச்சி அழகு தரும். ஜாதி மல்லக்குச்சி, மந்தாரம்குச்சி கெட்ட கனவுகளைப் போக்கும். எருக்கு வீரியத்தைக் கட்டும். ஆல் பசி தூண்டும். புங்கு வெற்றி நோக்கை வளர்க்கும். இச்சி பொருள் சேர்க்கும். இலந்தை இனிய குரல் தரும். கருங்காலி வாய் நாற்றத்தைப் போக்கி மணம் தரும். வில்வம் செல்வத்தைப் பெருக்கும். அத்தியின் பேச்சு வன்மை வளரும். மா ஆரோக்கியம் நிலைக்கச் செய்யும். வேம்பு, வாய் நாற்றம் பற்களில் சீழ், வேக்காளம், ஈறுகளில் வலி இவைகளைப் போக்கும். தடம்வு தைரியத்தையும் மேதையையும் அதிகப்படுத்தும். சம்பகம் வாக்கு வன்மை, கேட்டது மறக்காதிருத்தல் இவைகளைத் தரும். பொன் வாகை புகழ், அழகு, ஆயுள் தரும்.

எங்களுடைய பல இனிப்பு வகைகளும், பல கார வகைகளும் அவற்றிற்கு தந்த பல்வேறு நற்பலன்களையும் அளிக்கக் கூடியவை.

இனிப்புகள் **கோதுமை அல்வா, ரஸ மலாய், போளி** இதர வகையாக

காரம் **தட்டை, தேன் குழல், கை முறுக்கு, ஸ்பெஷல் மிக்ஸ் வெஜி டிபன், சமோசா, வருகல், கல்யாண சீர் முறுக்கு** வகையரு

## கிராண்ட் ஸ்வீட்ஸ் அண்டு ஸ்நாக்ஸ்

**24, 2வது பிரதான சாலை, காந்தி நகர், அடையாறு, சென்னை-600 020**

# சென்னை - பழனியில் சிகிச்சை

பெறுங்கள். உலக புகழ் பெற்ற பழனி சித்த வைத்தியபதி



**Dr. S. காளிமுத்து,** R.M.P. (IND) V.V.C., A.M.I.H., R.A.M.P., R.H.M.P.,

அவர்களின் சுற்றுப்பயணத்தில் அல்லது பழனியில் நேரில் சந்தித்து ஆலோசனை பெற்று இதுவரை கஷ்டத்துடன். அனுபவித்த வியாதிகள் நீங்கி சுகவாழ்வு பெறலாம்! உங்கள் பிரச்சனையான — தாம்பத்திய வாழ்வில் மாறுபாடு—சோர்வு — அணுக்கள் குறை—வீரியமின்மை-குடும்ப உறவில் முன்மாதிரி செயல்படுத்த முடியாமை நரம்பு துவளல்-தேக உறுப்புகள் மெலிவு-கெட்ட கனவுகள்-தூக்கம் இல்லாமை-குழந்தை செல்வம் இல்லாமை-வெட்கம்-நடுக்கம்-தோல்வி-ஆ. இருமல்-வாதநோய் — சருமநோய் — குடல்புண்—வயிற்று கோளாறுகள் — நவமூல வியாதிகள் மற்றும் இதர வியாதிகளும் 85 வருட அனுபவ மருந்துகள் பெற்று சுக வாழ்வும் - மறுமலர்ச்சியும் பெறலாம்.

---

**சென்னை விஜயம்: *தேதிகள் 10-11 & 17-18-19***

**நியூ உட்லண்ட்ஸ் ஹோட்டல்,** எட்வோர்ட்ஸ் எலியட்ஸ் ரோடு, சென்னை-4 போன்: 83111

---

பழனியில்: 23ந் தேதி முதல் 31ந் தேதி வரை தலைமை ஆபீஸ்—

**பழனி சித்தர் வைத்தியசாலை,** (Regd) பழைய தாராபுரம் ரோடு, பழனி-1

போன்: 316 — 316A வீடு: 420 தந்தி: 'சித்தர்'

---

சென்னை — பழனி ஆலோசனை நேரம்: காலை 10 to 12 மணி மாலை 3 to 5 மணி வரை மேலும் நேரில் ஆலோசனை பெற: 13-ந் தேதி: சேலம்-லக்ஷ்மி ராஜ்பவன், மாலை 2 to 4 மணி, 15-ந் தேதி: ஈரோடு-நவபவனம், காலை 10 to 12 மணி, திருப்பூர்-ஸ்ரீ கிருஷ்ணா லாட்ஜ் பகல் 2 to 3½ மணி. 16ந்தேதி கோவை, விஜயா லாட்ஜ் காலை 10 to 12 மணி 22ந்தேதி கோவை, ஹோட்டல் குரு, காலை 10 to 12 மணி 22ந்தேதி பொள்ளாச்சி கோபால் பில்டிங், மாலை 2 to 3½ மணி 23ந்தேதி பெரியகுளம் உடுப்பி லட்சுமி விலாஸ் காலை 8 to 10 மணி, தேனி பாண்டியன் லாட்ஜ், பகல் 11 to 1 மணி, கம்பம் புளிவர்ஸ் லாட்ஜ் பகல் 2 to 4 மணி, 24ந்தேதி மதுரை சந்தானம் லாட்ஜ் காலை 8 to 12 மணி, 24ந்தேதி விருதுநகர் ஹோட்டல், ஆஞ்சநேயா பகல் 2 to 4 மணி, இராஜபாளையம் ஆனந்தா லாட்ஜ், மாலை 5 to 6 மணி.

---

எமது மருந்துகள் கிடைக்குமிடம்: **கவிதா எண்டர்பிரைசஸ்,**

26, வாலர்ஸ் ரோடு, (மவுண்ட்ரோடு, பி.ஆர். & ஸன்ஸ் அருகில்) சென்னை-2

# இன் சொல்



உலகில் அநேக உயிரினங்கள் இருக்கின்றன. நீரிலே வாழக்கூடிய உயிரினங்கள், ஆகாயத்திலே பறக்கக் கூடிய உயிரினங்கள், பூமியிலே நடக்கின்ற உயிரினங்கள். இந்த உயிரினங்கள் அனைத்துக்கும் உண்பதற்கும், உரக்க சப்தமிடுவதற்கும் மட்டும் வாய் இருக்கிறதே தவிர, இனிமையாக இன்சொல் சொல்ல, உள்ளத்தில் உள்ள எண்ணத்தை வெளிப்படுத்த வாய்ப்புக் கிடையாது. மனிதனுக்கு மட்டுமே வாயினால் உண்பதற்கும் சப்தமிடுவதற்கும் அழகான சொற்களால் பேசுவதற்கும் வாய்ப்பும் திறமையும் இருக்கின்றன.

மனிதனுக்கு வாய் உண்ணுவதற்கும், பேசுவதற்கும் வாய்ப்பாக அமைகிறது. உண்பதிலும், நல்லுணவை, தூய்மையான உணவை, இறைவனுக்கு அளித்த உணவை உண்ண வேண்டும். பேசுவதிலும் நல்ல பேச்சு இனிமையான பேச்சு, உண்மையான பேச்சு, இறை சம்பந்தமான பேச்சு பேச வேண்டும். நாம் பேசக்கூடிய பேச்சு உண்மையாக இருந்தாலும் பிறருக்குத் துன்பம் தரக்கூடிய விதமாகப் பேசக் கூடாது. நயமாகக் கூற வேண்டும். பேசுவதில் இறைவன் சம்பந்தப்பட்ட பேச்சுக்களும், உண்மையும் இடம் பெற்றால் அவன் சொல் ஒவ்வொன்றும் மதிப்புப் பெறும்.

''தீயினால் சுட்ட புண்'' ஆறும். ''வாயினால் சுட்ட புண்'' ஆறாது என்பார்கள். இன்சொல்லினால் உலகத்தையே ஆள முடியும். கடுஞ்சொல்லினால் உலகத்தையே ஆளக் கூடியவனாக இருந்தாலும் மிகுந்த துன்பத்தை அடைவான். வெறும் பேச்சைப் பேசுவதைக் காட்டிலும் இறைவனைப் பற்றிப் பேசினால் துன்பம் குறையும். வம்பு வராது. ''இறைவனைப் பற்றிப் பேசாத நாளெல்லாம் பிறவா நாளே'' என்கிறார் ஒரு பக்தர். மனிதனைத் தவிர மற்ற உயிரினங்கள் எல்லாம் உள்ளத்துக்குக்குள்ளே இருக்கும் இன்ப, துன்ப உணர்ச்சிகளை சப்தத்தின் மூலமாக வெளிப்படுத்துகின்றன. மனிதன் தன் உள்ளத்திலே உள்ள எண்ணங்களை அருமையான சொற்களாலும், கவிதைகளாலும் வெளிப்படுத்துகிறான். இறைவனை வாயாரப் பாடி அருள் பெறுகிறான். எழுத்து தோன்றுவதற்கு முன்பே சப்தம், ஒலி, வந்துகொண்டிருக்கிறது. முதன் முதலாக வந்த ஒலி ஓம்காரம். எந்த ஒலியாக இருந்தாலும் அந்த ஒலி மறவாமல் இருப்பதற்கு நினைவுக் குறிப்பாக எழுத்து வந்தது.

ஒவ்வொரு மனிதனும் தீய சொற்கள் சொல்லாமல் நல்ல சொற்கள் சொல்லி, உண்மையான சொற்களைச் சொல்லி, இறைவனின் புகழைச் சொல்லி, பிறருக்குத் துன்பம் தராத சொல்லைச்சொல்லித் தானும் இன்புற்று,பிறரையும் இன்புறச் செய்யவேண்டும்.

இன்சொல்லில் சிறந்த சொல் இறைவன் திருநாமம். ''நாராயணா என்னா நாவென்ன நாவே'' என்றார் இளங்கோவடிகள். பஞ்சாட்சரத்தின் மகிமையைக் கூறவும் வேண்டுமோ? ''வெவ்வினை தீர்த்தருள்கின்ற ராமநாம வியன் சுடரே'' என்று போற்றுகிறார் இராமலிங்க அடிகளார். காலை எழுந்ததிலிருந்து பல நேரம் மௌனத்தில் கழிகிறது. படுக்கை சுற்றும்போது, குளிக்கும் போது, அலங்கரித்துக் கொள்ளும்போது, பஸ்ஸுக்குக் காத்து நிற்கும்போது... இச் சமயங்களிலெல்லாம் இறைவன் திருநாமத்தை உச்சரித்தல் மன, உடல் ஆரோக்கியத்தை அளிக்கும்.

-ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி காமகோடி
பீடாதிபதி ஜயேந்திர சரஸ்வதி
சங்கராசார்ய சுவாமிகள்



● பொது அறிவுப் பக்கத்தில் இரண்டு வாரமும் ஆண்களே முதல் பரிசு பெற்றிருக்கிறார்கள். பெண்களின் பொது அறிவு குறைந்து வருகிறதோ?
கெங்கவல்லி—636 105 வானதி.

● ''ரஜனி'' நடித்த இந்திப் படம் ''அந்தா கானூனு''க்குத் தங்களின் விமர்சனம் எங்கள் சூப்பர் ஸ்டாரை மேலும் ஊக்கப்படுத்துவது, உற்சாகமூட்டுவது போலிருந்தது. ரஜனி சார்பில் என் நன்றி!
மே. மாம்பலம். எஸ். மோகன்.

● நற்புகழ் கவிஞன் எங்கள்
நயத்தகு வைர முத்து
கற்பகத் தமிழாம் சாற்றில்
கற்பனைத் தேனைக் கூட்டி
அற்புத மரபு போற்றும்
அருஞ்சுவைக் கவிதைப் பானம்
பொற்புறத் தந்தான் மாந்தி
புகலரும் போதை கொண்டேன்.

வேலூர் (சேலம்). அர்த்தநாரி.

● 24.4.83 இதழில் துணுக்குகள் 13, ஜோக்குகள் 17 போட்டிருக்கிறீர்களே, கல்கியில் இவ்வளவு துணுக்குகளும், ஜோக்குகளும் வெளி வந்தது இதுதான் முதல் தடவையோ?
கும்பகோணம்-1. பிரசன்ன ராஜன்.

● கதைகளில் மட்டும் வந்து கதிகலங்கச் செய்யும் புற்றுநோய் இன்று மனித இனத்தை எவ்வாறு ஆட்டிப்படைக்கின்றது என்று புள்ளி விவரங்களுடன் பயன் உள்ள கட்டுரையை வழங்கியதற்கு நன்றி.
ஊசூர் வெளிக்கடை ராஜன்.

● ''பாக்கியசாலி தமிழன்'' தலையங்கம் வெகு அருமை! கோடை வறட்சியாலும், ஆட்சியாளர்களின் கையாலாகாத நிர்வாகத்தாலும் வருந்திக் கொண்டிருந்த மக்களுக்கு மனத்துக்கு இதம் அளிக்கும் மாமருந்தாக அமைந்திருந்தது.
பரசலூர் ஆர். நாகராஜன்.




# அருஞ்சுவைக் கவிதைப் பானம்!

● காஞ்சிப் பெரியவரவர்கள் நடத்திய இந்திய சமய கலாச்சாரக் கலைவிழாவைக் காணாதவர்களுக்கு 'கல்கி'யில் வந்த படங்களும், கட்டுரையும் ஒரு வரப்பிரசாதமாகவே இருந்தது.
பெரம்பூர் அபிராமிதாசன்.

● மன்னார்குடி ராஜகோபாலனுக்குப் பல அபூர்வமான வாகனங்களில் மிக முக்கியமானது ''கண்ட பேரண்ட பக்ஷி'' என்னும் வாகனமாகும். வேறு எந்த ஊரிலும் காண முடியாத இந்த வாகனம் ஒரு உடலும், மயில் போன்ற இரண்டு முகங்களும் உள்ள பக்ஷி.
மன்னார்குடி-614 001. நீலா

● பொது அறிவுப் பக்கத்தில் கல்லூரிகளுக்கிடையே நடைபெறும் 'குவிஸ்' போட்டிகளுக்கான விடைகள் தனிப் பக்கத்தில் பிரசுரிக்கப்பட்டால் என்னைப் போன்ற ஏராளமான கல்கி வாசகர்கள் தங்களுடைய பொது அறிவுத் திறனை மதிப்பிட்டுக் கொள்ள ஏதுவாயிருக்கும்.
திருச்சி-14 எஸ். முரளி

● தங்களது சித்திரைச் சிறப்பிதழிலிருந்து சிறுகதை எழுத்தாளர்களுக்கு (சிறுகதைப் போட்டி) ''தேனும், பாலும்'' என்றால், வாசகர்களுக்கு (வாசகர் போட்டி) ''பாலும் பழமும்'' அளிக்க முடிவு செய்திருக்கிறீர்கள், மிக்க மகிழ்ச்சி.
திருமலைராயன்பட்டினம்
ஏ. ஆர். திருநாவுக்கரசு

● எனது நண்பர் கொமாரபாளையம் எஸ். எம். முத்து 'கல்கி' 27.2.83 தேதி இதழ் அனுப்பியிருந்தார்.

காந்தியையும் ரவீந்தரரையும் சுபாஷையும் தெரிந்த அளவுக்கு ஜப்பானியர்களுக்கு பாரதியாரைப் பற்றி ஒன்றும் தெரியாது. எனது நண்பர் கேட்டுக் கொண்டதற்கிணங்கப் பாரதியாரை ஜப்பானியருக்கு அறிமுகப் படுத்த முயன்று வருகிறேன். அதற்கு தங்கள் பத்திரிகை மூலம் தாங்கள் அளித்த ஊக்கத்துக்கும் ஆதரவுக்கும் என் மகிழ்ச்சியையும் நன்றியையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஷுஜோ மாட்ஸுனகா
松永修蔵
(ஷிமாடா) ஜப்பான்

## பெருமையுடன் அளிக்கின்றோம்

# ஆயுர்சக்தி® யை-புதிய

## முவ்வகை செயற்திறன் கொண்ட ஆயுர்வேத வலி நிவாரணி.



ஆயுர்வேத
தன்மை அடங்கிய
முவ்வகையில்
செயலாற்றும் புதிய
அதிவேக வலி
நிவாரணி.

ஆயுர் சக்தியின்
தனித் தன்மை
என்ன ?

இப்பொழுது, உங்களுக்கு தலைவலி, ஜலதோஷம், தசைப்பிடிப்புக்களைப் போக்க தனித்தனியான மருந்துகள் தேவையில்லை. ஆயுர்சக்தி இவைகளை ஒன்றாக இணைத்து உருவாக்கப்பட்டுள்ளது. பல மூலிகைகளைக் கொண்ட ஆயுர்சக்தியின் திறன் மிக்க கலவைப் பொருட்கள் உடனடியாக வேலை செய்து விரைவில் நிவாரணம் அளிக்கிறது.

பல வருட ஆராய்ச்சிகளின் விளைவாக ஆயுர்வேத முறையில் அரிய பல மூலிகைகள் மற்றும் சுத்தமான மூலிகைத் தைலங்களைக் கொண்டு ஆயுர்சக்தி தயாரிக்கப்பட்டுள்ளது.

எனவே அடுத்தமுறை நீங்கள் தலைவலி, ஜலதோஷம் அல்லது தசைப் பிடிப்புகளால் அவதியுறும் போது புதிய சக்திவாய்ந்த ஆயுர்சக்தியை நாடி விரைவில் நலம் அடைவீர்.

உங்களது வீட்டு உபயோகம் மற்றும் பயணத் தேவைகளுக்கு ஏற்ப மூன்று விதமான அளவுகளில் கிடைக்கின்றது.

ஆயுர்சக்தி — முவ்வகையில் செயலாற்றும் அதிவேக வலி நிவாரணி

இத்தரமான படைப்பினை அளிப்பவர்கள் ;
பொருக்கா இண்டஸ்ட்ரீஸ் பிரைவேட் லிட்.
கன்ஸ்யூமர் ப்ராடக்ட்ஸ் டிவிஷன்,
22-ஏ, கதீட்ரல் சாலை, சென்னை-600 086.
தொலை பேசி : 83782

Interpub-(M)-83




## 15

டிஜிட்டல் அலாரம் சுநாதமாய் ஒலித்தது. முந்தைய இரவு பார்ட்டியிலிருந்து நள்ளிரவு வீடு திரும்பியதில் உடம்பு சோம்பலுடன் கிடந்தது. இமைகளைப் பிரிக்க முடியாமல் கார்த்திக் போர்வைக்குள் முடங்கிக் கொண்டான்.

''கார்த்திக்!''

அவளுடைய ஸ்பர்சம் மெத்தென்றிருந்தது. மெலிதாக வந்த உடம்பின் வாசனையும், அதன் அண்மையும் போதையைத் தந்தன. அவன் சரேலென்று அவளை இறுக அணைத்துக் கொண்டான்.

''ஏய், எழுந்திரு!'' என்று அவள் சிணுங்கினாள். ''ஆபீஸுக்கு நேரமாயிடும்!''

''இன்னிக்கு லீவு போட்டுடறேன்!''

பூ மாதிரி இருக்கும் அந்த உடம்பை அணைத்தபடி நாள் முழுவதும் படுத்திருக்கலாம் போல் இருந்தது — வேலையை மறந்து ஃபாக்டரியை மறந்து உலகத்து எல்லா அஞ்ஞானங்களையும் மறந்து.....

''லீவு போடற ஆளைப் பாரு?''

அவனது பின் மண்டையில் அவள் செல்லமாகத் தட்டினாள்.

''டி. ஜி. வரப்போகிற சமயத்திலே லீவு போட மனசு வருமா உனக்கு?''

அவனது விழியின் இறுக்கம் சட்டென்று தளர்ந்தது.

''ஓ காட்! யூ ஆர் ரைட்!'' என்று எழுந்து உட்கார்ந்தான். கண்களை நன்றாகத் தேய்த்துவிட்டு அவளைப் பார்த்து லேசாகச் சிரித்தான். இளநீலநிற 'நைட்டி'

யில் அவள் இறங்கடித்தாள். அவன் பாம்பே டையிங் ஷீட்டை அவள் கழுத்து வரை மூடினான்.

''டி. ஜின்னு ஒருத்தர் இருக்கிறதே அப்புறம் மறந்து போயிடும்!''

அவள் கலகலவென்று சிரித்தாள். ''இன்னும் பத்து நிமிஷத்திலே, அவரைத் தவிர வேறு ஒரு ஞாபகமும் உனக்கு இருக்கப் போறதில்லே.''

அவளுடைய கன்னத்தை லேசாகத் தட்டி, ''என்ன செய்யட்டும் பிழைப்பு ஸ்வாமி!'' என்று புன்னகைத்து அவன் எழுந்தான்.

அவள் பதில் ஏதும் சொல்லாமல் விட்டத்தைப் பார்த்தபடி படுத்திருந்தாள். பார்வையை அகற்றாமல் மெல்லச் சொன்னாள்.

''பிழைப்பே வாழ்க்கை ஆயிடக் கூடாது கார்த்திக்!''

அவன் அவசரமாகப் பேன்டை பிரஷ்ஷில் போட்டுக் கொண்டே பொறுமையில்லாமல் சொன்னான்.

''நோ டைம் ஃபார் லெக்சர்ஸ் கண்ணு! எங்கே, எழுந்துண்டு எனக்குக் காப்பி போட்டுக் கொடு பார்க்கலாம்! எங்காத்திலே இருந்துருந்தோம்னு இத்தனை நேரத்துக்கு நீ குளிச்சு மடி உடுத்திண்டு அம்மாவுக்குக் காய்கறி நறுக்கிக் கொடுத்திண்டிருந்திருப்பே!''

நைட்டியின் மேல் டிரெஸ்ஸிங் கவுனை மாட்டியபடி அவள் முணுமுணுத்தாள்

''ஓ அது எத்தனை சுவாரஸ்யமாயிருந்திருக்கும்! நீதானே தனியா வரணும்னு பிடிவாதம் பிடிச்சே!''

''ப்ளீஸ் தாரா!''

''ஓகே, ஓகே! நான் ஒண்ணும் சொல்லலே! என்னுடைய சௌகர்யத்துக்காகத் தனியா வந்தோம்னு மாத்திரம் சொல்லாதே.''

''சரி சொல்லலே. என் சௌகர்யத்துக்காகத்தான் தனியா வந்தேன். இல்லேன்னு கணேசன் மாதிரி நானும் பெண்டாட்டியை லவ் பண்ண ஏதாவது மட்ட சினிமா ஹாலைத் தேடிண்டு போக வேண்டியிருந்திருக்கும்! சந்தியாவந்தனம் செய்யறபோது யாருக்கும் தெரியாம உன் கையைப் பிடிக்க வேண்டியிருந்திருக்கும்!''

''எவ்வளவு திரில்லிங்கா இருந்திருக்கும்!''

''உன் கையாலே காப்பி கிடைச்சா அதுகூட எனக்குத் திரில்லிங்தான் தாரா!''

''தரேன் தரேன்!'' என்று அவள் சிரித்தபடி சமையலறைக்கு விரைந்தாள். அவன் நிதானமாகக் குளியலறைக் கதவைச் சாத்தினான். குழாயைத் திறந்து இரைச்சலுடன் பக்கெட்டில் விழுந்த நீரின் த்வனியில் புகபுகவென்று பிறிட்டுக் கொண்டு



கிளம்பிய நினைவுகளை அமுக்க முயன்றான். பக்கெட் நிரம்பி மேலே நீர் சரிவதன் பிரக்ஞை ஏற்படாத அளவுக்கு ஞாபகங்கள் அவனை அமுக்கின....

இப்பொழுது அப்பாவும், கணேசனும் கோவிலுக்குக் கிளம்பிப் போயிருப்பார்கள் என்கிற நினைப்பு அவனுள் ஒரு கனிவைச் சுரந்தது. விடியற்கால நேரத்தில் ரஜாய்க்குள் முடங்கியிருக்கிறாற் போல் பிரமையேற்பட்டது. மணியோசையின் பரிணாமம் மெல்ல மெல்ல அதிகரித்தது — தொடர்ந்து அப்பாவின் வெண்கலக் குரலில் ''சுக்லாம் பரதரம் விஷ்ணும்....!'' சட்டென்று அவனுள் ஒரு சிலிர்ப்போடிற்று. எத்தனை வருஷங்களாகக் காதில் விழுந்த குரல்! அவனுள் ஐக்கியமாய்ப் போய் விட்ட ஒரு குரல்! டிஜிட்டல் அலாரமுக்கு இல்லாத ஒரு சக்தி அதற்கு இருந்தது. கண்விழிக் கையிலேயே நீராட்டுகிற மாதிரி.....தூக்கத்தோடு அஞ்ஞானத்தை விரட்டுகிறமாதிரி... திடீரென்று அப்பாவின் முகம் அவனுள் விசுவரூபமாகத் தெரிந்தது.

அன்று முருகன் சன்னதியில் அவருக்கு வெகு அருகில் நின்று முருகனுக்குச் சந்தனக் காப்பைச் செலுத்தின காட்சியும் அவர் கண்களில் தென்பட்ட கனிவையும், பேரானந்தத்தையும் கண்டு தான் மெய்சிலிர்த்து நின்ற நிலையும் பளிரென்று நினைவைத் தாக்கின. எப்படிப் பட்ட பரவசம் தெரிந்தது அவர் முகத்தில்! அந்தப் பொழுதின் சந்தோஷத்தை விட வேறெதுவும் பெரிசில்லை என்றாற்போல் —

அவருக்கும் அஞ்ஞானமுண்டு, கோபம் உண்டு!

''போறச்சே, அட்ரஸைக் கொடுத்துட்டுப் போ!''

இப்பொழுது ஆறு மாதங்களுக்குப்பிறகு அந்த வார்த்தைகள் நினைவுக்கு வரும் போதும் அவனுக்குச் சிரிப்பு வந்தது. ஆத்திரம் ஏற்பட்டது.

''பழைய சகாப்தம் முடிஞ்சுபோச்சு!''

பின் முடியாமல் என்ன செய்யும்? உலகம் ஒரே மாதிரி இரவும் பகலுமாய் உருண்டாலும் காலம் நின்ற நிலையில் நிற்குமா? நின்றால் முன்னேற்றம் எங்கிருந்து வரும்? அவருடைய பிம்பமாக தான் இல்லாத போது, அவருடைய வாழ்க்கை முறையைப் பின்பற்றுவது எப்படிச் சாத்தியம்? நாகரீக சௌகர்யங்களுடன் வளர்ந்த ஒரு நவயுகத்துப் பெண் சராசரி சௌகர்யம் கூட இல்லாத அந்தக் கட்டுப்பெட்டிக் குடும்பத்துடன் இருக்க வேண்டும் என்று எப்படி எதிர்பார்த்தார்? அதிகம் ஐக்யூ இல்லாத கோமதிக்குப் புரிந்தது கூட அவருக்குப் புரியவில்லை என்றால் அதற்கு என்ன அர்த்தம்?

அவன் அன்று தான் வேறு வீடு பார்த்திருப்பதைப் பற்றித் தெரிவித்த பிறகு எல்லாரும் இரண்டு நாட்களுக்கு ஒருசோகப் போர்வையைப் போர்த்திக் கொண்டு நின்றார்கள். அம்மா அடிக்கடி சமையற்கட்டில் கண்ணைக் கசக்கிக் கொண்டு நின்றாள். அவளிடம் வெளிப்படையாகப் பிரியம் காட்டவே தெரியாத. ஆழமான யோசனைத் திறன் இல்லாத அவனுக்கு நியாயமான காரணங்களுக்காக அவன் புதுப்பெண்டாட்டியுடன் வேறு வீட்டுக்குப் போகும் செய்தி இப்படி ஒரு பாதிப்பை உண்டாக்குமா என்று அவனுக்கு வியப்பேற்பட்டது. குடும்பக் கட்டுக் கோப்பு போய் விடும், போய் விட்டது, என்ற அப்பாவின் பயத்தின் எதிரொலிதான் அவளுடைய கண்ணீர் என்று தோன்றிற்று. 'என்னை நீ ஏமாற்றி விட்டாய்' என்கிற பாவனையுடன் அத்தை வளைய வந்தது அவனுள் ஒரு குற்ற உணர்வையும் விம்பையும் மாறி, மாறிக் கிளப்பிற்று. 'இயற்கைக்கு விரோதமாய் என்ன செய்து விட்டேன்' என்று அவன் தனக்குள் பலமுறை சொல்லிக் கொண்டான். 'படிக்காத கிராமப் பொண்ணைக் கல்யாணம் செய்து கொள்வது என்றால் எப்படி முடியாத காரியமோ, அதுபோல் தாரா இந்த வீட்டில் இருப்பதும் முடியாதது! இட் இஸ் ஸிம்பிள் லாஜிக்!'

இரண்டே நாளில் அத்தை தெளிந்து விட்டாள். அவனுடன் புது வீட்டுக்கு வந்து பார்த்து விட்டு ரொம்ப கச்சிதம் என்று சிலாகித்தாள். எதுவுமே நடக்காதது போல் கணேசன் தனது வழக்கமான ஞானப் புன்னகையுடன், நேசப் பார்வையுடன், வளைய வந்தான். அப்பா கூட பழைய நிலைக்குத் திரும்பி விட்டார். அவர் இஷ்டப்படி ஆடம்பரமேயில்லாமல் முருகன் சன்னதியில் வைதிக முறைப்படி எளிமையாகக் கல்யாணம் முடிந்த திருப்தியில் புதிய வீட்டிற்குக் குடிபோக நாள் கூடக் குறித்துக் கொடுத்தார். வாரத்திற்கு ஒரு முறை தாராவும் அவனும் அவர்களைப் பார்க்கச் செல்லும் போது அவர்கள் வரவை எதிர்பார்த்து வீட்டில் உட்கார்ந்திருக்கிறார்....

அவனுக்குச் சிரிப்பு வந்தது. எத்தனை மறைமுகமான அன்பு காட்டல் அது! வெளிப்படையாக அன்பு காட்ட அவருள் ஏதோ கூச்சமிருக்க வேண்டும். சன்னதிக்குள் முருகன் கல்லாய், சிலையாய், நிற்பதால் தான் அவர் மெய்மறந்து போகிறார். சாமியும் ஊனும் சதையுமாய் நின்றிருந்



'கூ ஸ்டார்க்' என்ற இங்கிலாந்து கவர்ச்சி நடிகை இளவரசர் ஆண்ட்ரூவை மயக்கியது உலகமறிந்த விஷயம். இப்போது 'ப்ளூ லகூன்' என்ற படத்தில் நடித்த அமெரிக்கக் கவர்ச்சி நடிகை 'ப்ரூக் ஷீல்ட்' என்பவரும் இளவரசர் ஆண்ட்ரூவைச் சந்தித்துப் பேசத் துடிக்கிறாராம். ஆண்ட்ரூ சரியான கவர்ச்சி இளவரசர்தான் போலும்.

—'பாதுஷா'

என் கண்ணையே
என்னாலே நம்ப முடியலையே




# புதிய அதிக சக்திவாய்ந்த சூபர் 777 டிடர்ஜெண்ட் பார்

## வாக்குறுதி உன்னதத்தன்மைக்கு மட்டுமே அல்ல, வாக்குறுதிகூட வாக்குறுதியைக் காப்பாத்தும்.

இப்போது, புதிய சூபர் 777 டிடர்ஜெண்ட் பார்மூலம்எனக்கு அனைத்தையும்விட அதிக வெண்மை சலவை கிடைக்குது. இதோட டிடர்ஜெண்ட் ஃபார்முலா முன்னைவிட அதிக சிறப்பா இருபபதாலே முன்னைவிட அதிக நுரை தருது, அதிக துணிகளை துவைக்குது, அதிக நாட்கள் உழைக்குது. இதனால்தான் மற்றெல்லா டிடர்ஜெண்ட் பார் மற்றும் சோப்புகளைவிட இது சிறந்ததாகும்.

உபயோகப்படுத்திப் பாரீர்...நீங்களே கண்டு கொள்வீர் நயத்தை, திரும்பத் திரும்ப வாங்குவீர் இதை.

Shilpi DM 2/83 Tam.

தால் அப்பாவின் பார்வையே, பாவனையே வேறாய் இருந்திருக்கும்....

''புனைந்துரையேன் பொய்புகலேன்
சத்தியஞ் சொல்கிறேன்;
பொற்சபையிற் சிற்சபையிற்
புகுந்தருணமிதுவே..''

நீரை மொண்டு மொண்டு தலையில் விட்டுக் கொள்ளும்போது தொண்டை அடைத்துக் கொண்டது.

பாத்ரூம் கதவு தட்டப்பட்டது. அவன் சட்டென்று உலுக்கப்பட்டவன் போல் சுய நினைவுக்கு வந்தான்.

''காப்பி வேணும்னு கேட்டுட்டுக் குளிக்க ஆரம்பிச்சுட்டியா?''

''ஓ ஆமாம்! இதோ வரேன்!''

''நிதானமா சுலோகம் சொல்லிண்டு குளிச்சுட்டு வா. அவசரமில்லே. உன் காப்பியை நான் குடிச்சுட்டேன்! பாஸ் வரார்னு இப்படியா நடுங்கணும்?''

பு. ரீசோ நினைவே எனக்கில்லை என்று தனக்குள் சொல்லியபடி அவன் அவசர அவசரமாக உடை மாற்றிக் கொண்டான். நினைக்க நினைக்க ஆச்சரியமாக இருந்தது. அப்பாவுக்கும் தனக்கும் இடையே ஒரு யுகத்தின் தூரம் என்று நினைத்தது போக இப்பொழுது அவருடைய நினைவுகள் எப்படி நிழலாய்த் துரத்துகின்றன! ஓ கடவுளே இதிலிருந்து எப்பொழுது விடுபடுவோம்?

அவன் வெளியில் வரும்போது தாரா அன்றைய பேப்பரில் ஆழ்ந்திருந்தாள். திருமணமான பின்னும் அவள் எப்பொழுதும் போல் தன்னுடைய அபிமான பொழுது போக்குகளிலும் பிரசாரக் கூட்டங்களிலும், பொதுநல வேலைகளிலும் சுறுசுறுப்பாக இருந்தாள்.

அவன் அலுவலகப் பளம்பியதும் நிறமும் முக்கால்வாசி வெளி வேலை இருக்கும். ஜீன்ஸிலும், மாக்ஸியிலும் அவள் வலைய வருகையில் அவன் தனக்குள் எழும் கேள்வியிலேயே சமாதானம் இருப்பதாக நினைத்துக் கொள்வான்.

'இவள் எப்படி அந்த வீட்டில் பொருந்த முடியும்?'




அவள் புதிதாகக் காப்பியைக் கலந்து கொண்டு வந்து கொடுத்தாள்.

''நீ அமர்க்களமா குளிச்சிண்டிருக்கும் போது மிஸ்டர் லோபோ ஃபோன் பண்ணினார்.''

''என்ன சொன்னார்?'' என்றான் அவன் புதிய சுவாரஸ்யத்துடன்.

''ஏன் உங்காத்து ரேடியோ இப்படி அலர்றதுன்னார். அது ரேடியோ இல்லே என் ஹஸ்பெண்ட்னு....''

அவன் தன் சிரிப்பை அடக்கிக் கொண்டு மறித்தான்.

''சும்மா அளக்காதே, தாரா, என்ன விஷயமாம்?''

''எனக்குத் தெரியாது. நீயே விசாரிச்சுக்கோ. இதைப்பார், ஏதாவது பார்ட்டின்னா நான் வரல்லே!''

அவன் தலையை அவசரமாக வாரிக் கொண்டு போனுக்கு விரைந்தான்.

''ஆரம்பிச்சுட்டியா உன் முணுமுணுப்பை. நாலு பேரை மீட் பண்ணாத்தான் நான் முன்னுக்கு வர முடியும். பார்ட்டிங்கிற சாக்கிலே சந்திக்கறதெல்லாம் காண்டாக்ட்டுக்காக – யாரையும் பார்க்காம, யாரோடையும் பழகாமே இளைத்துத் தவளையாட்டம் உட்கார்ந்திருந்தா நா இதே லெவல்லே இருக்க வேண்டியது தான்.''

''ஏன் இந்த லெவலுக்கு என்ன குறைச்சல்?''

ரொம்பவும் குழந்தைத்தனமாகப் பேசுகிறாள் என்று அவனுக்கு எரிச்சல் ஏற்பட்டது.

''முட்டாள்தனமாப் பேசாதே தாரா! மேலே பறக்கணும் எனக்கு! நடந்தாப் போறாது!''

அவள் முகம் லேசாக இருண்டது. யோசனைக் கோடுகள் தெரிந்தன. அவன் டெலிபோனின் எண்களைச் சுழற்றிக் கொண்டே அவளைக் கவனித்தான். அவள் சுவாரஸ்யத்துடன் தோளைக் குலுக்கி உதட்டைப் பிதுக்கினாள்.

''நடக்கறது தான் எனக்கு நிச்சயமான விஷயம். என்னு பூமி மேலே இருக்குங்கிற நிம்மதி இருக்கும்.''

அவளுடைய வார்த்தைகளில் அப்பாவின் சாயல் அடித்தாற்போல் அவனுக்குத் திகைப்பேற்பட்டது. மறுமுனையில் லோபோவின் மதர்த்த அட்டகாசக் குரல் வெடித்தது. அவன் பேச ஆரம்பித்ததும் தாரா விருக்கென்று எழுந்து சமையலறைப் பக்கம் செல்வதை அவன் கண்டு கொள்ளாதவன் போல் பேச்சைத் தொடர்ந்தான்.

அவள் அவனுக்காக 'ப்ரெட் டோஸ்ட்' செய்து கொண்டிருந்த போது பின்புறமாக நின்று அணைத்தான்.

''விஷயத்தைச் சொல்லு. இந்தக் காக்கா யெல்லாம் வேண்டாம்'' என்றாள் அவள் திரும்பாமல்.

அவனுக்குச் சிரிப்பு வந்தது. எத்தனை வீம்பு இவளுக்கு! – அதுவும் உப்புப் பெறாத விஷயங்களுக்கெல்லாம்!

''ரொம்ப சாதாரண விஷயம்'' என்றான் அவன் மழுப்பலாகச் சிரித்துக்கொண்டு,



கல்கத்தாவில் வங்காளி ஒருவரிடம் ''எங்கள் ஊர்க் கவிஞர் சிலை விவேகானந்தா பூங்காவில் உள்ளது பார்த்தீரா'' என்று வினவினேன். ''ஓ, பார்த்தேனே! சுப்ரமணிய பாரத்''தானே என்றார். பாரத் இல்லை. 'பாரதி' '' என்று நான் கூற, அவர் என்னை அவ்விடத்துக்கே இழுத்துச் சென்று, ''பார்!'' என்று காட்டினார். அழகாக, 'சுப்ரமணிய பாரத்' என்று புள்ளியும் வைத்திருக்கிறது.. இத்தவற்றினைச் சிலை வைத்திருக்கும் மன்றங்கள், சங்கங்கள் கவனித்திருக்கக் கூடாதா?

நேரில் பார்த்தவர்: அங்கயற்கண்ணி மைந்தன்

''வீட்டிலேயே டீ. வி. பார்க்கிற நேரத்திலே வெளியில் போகப் போறோம் அவ்வளவுதான்.''

''பார்ட்டியா?''

''ஆமாம்!''

''நான் வரல்லே, ஸாரி!''

குரலிலிருந்த கண்டிப்பு அவனைச் சுரீரென்று உதைத்தது. எரிச்சல் ஏற்பட்டது.

''தாரா, நீ அநாவசியமா ஸீன் பண்றே. நம்ம ரெண்டு பேரையும் கூப்பிட்டிருக்கும் போது நான் தனியா எப்படிப் போக முடியும்?''

''நீயும் போகணும்னு என்ன கட்டாயம்?''

''எத்தனை தடவை சொல்லட்டும் நான். லோபோ டி. ஜிக்கு வேண்டியவர். இன்னும் சில வருஷங்கள்லே அவரே டி. ஜி.யா வரலாம். அவர் கூப்பிடும் போது போக வேண்டாமா? என்னுடைய எதிர்காலத்துக்கு இது ரொம்ப முக்கியம்.''—

''எது?''

''எனக்கும் லோபோவுக்கும் இருக்கிற உறவு.—''

தாராவின் முகம் லேசாகச் சிவந்தது. தலையாட்டலில் ஒரு ஆவேசம் தெரிந்தது.

''காக்டெய்ல் பார்ட்டிக்குப் போய் அவன் தோள்மேலே கையைப் போட்டாத்தான் நீ முன்னுக்கு வர முடியும்னு நினைக்கறியா? அப்படின்னு உன்கிட்டே... உனக்கு நம்பிக்கையில்லேன்னு அர்த்தம். உன் உழைப்பைப் பத்தி உனக்கே நல்ல அபிப்பிராயம் இல்லேன்னு அர்த்தம்! உங்கிட்ட நல்ல சரக்கிருந்தா விளம்பரம் எதுக்கு?''

''என்ன இது விளம்பர உலகம் பெண்ணே!''

அவள் மிகத் தீவிரமான முகபாவத்துடன் சொன்னாள்:

''அது ஒரு சத்தியமில்லாத உலகம். நான் அதை வெறுக்கறேன். ஐ ஹேட் பார்ட்டீஸ்! ஐ ஹேட் தட் அட்மாஸ்ஃபியர்! சரியான பைத்தியக்காரப் போலி ஆசாமிகளைத்தான் நான் அங்கே பார்க்கிறேன். ஆ! அங்கே வர பெண்கள்! புடவை, நகை, வேலைக்காரர் பிரச்சினை — இதைத் தவிர வேறு விஷயமும் உலகத்திலே உண்டு என்கிற அறிவே இல்லாத பெண்கள்! ஆண்கள் இன்னும் மோசம். சரியான சுயகாரியப் புலிகள்! ஓட்டப் பந்தயத்திலே, அடுத்தவன் காலை எப்படி ஒடிச்சா பந்தயத்திலே நமக்கு லாபம்னு பார்க்கிற ஆண்கள். 'பாஸை'த் திருப்திப்படுத்த எந்த நிலைக்கு வேணாலும் போகக் கூடிய....''

இத்தனை கவர்ச்சிக்கும், அறிவிற்கும் பின்னால் இவளுள் எத்தனை அசட்டுப் பிடிவாதங்கள் இருக்கின்றன என்கிற சின்ன நமைச்சலுடன் அவன் விளையாட்டாக அவள் தோளைப் பற்றினான்.

''உனக்குப் பிடிக்கிறதோ இல்லையோ, எனக்காக, நீ என் மனைவிங்கற காரணத்துக்காக இதையெல்லாம் பொறுத்துக்கக் கூடாதா?''

''உன் மனைவியாயிட்டதினாலே நான் ஏன் என் கொள்கைகளை மாத்திக்கணும்? பிடிக்காத விஷயத்தை ஏன் செய்யணும்?''

முணுமுணு என்று அரித்த கோபத்துடன் அவன் மௌனமாக எழுந்தான். இவளும் இவளது கொள்கைகளும்! எல்லார் மனைவிகளும் எப்படி அழகிய பொம்மைகளாய், அடங்கின நாய்க்குட்டிகளாய்க் கணவனுடன் பாஸ்களையும் அவர்களது மனைவிகளையும் குழையடிக்கிறார்கள்!

''ஐ ஹேட் தட் ஹிப்பாக்ரஸி!''

அவன் லேசாக அதிர்ந்தான். தாராவின் குரலில் வெறும் கோபம் மட்டும் இல்லை. ஒரு துக்கம் இழையோடிற்று.

''நான் அந்தப் பைத்தியக்கார உலகத்தைப் பார்த்தவ கார்த்திக்— அதை வெறுத்துப் பயந்து ஓடி வந்தவ!''

''ஓ.கே. ஓ.கே! நான் உன்னை இன்னிக்கு வற்புறுத்தலே. ஆனா நான் போகாம இருக்க முடியாது. ஸாரி. மேடைக்கு வந்தப்புறம் என் பாகத்தை நான் நடிக்காம இருக்க முடியாது. யூ கால் இட் ஹிப்பாக்ரஸி! ஐ டோண்ட் கேர்!''

அவன் டையும், ஷூவும் அணிந்து ப்ரீஃப் கேஸைத் தூக்கிக் கொண்டு ஆஃபீஸுக்குக் கிளம்புகையில் அவள் இன்னும் தீவிர யோசனையுடன் அமர்ந்திருந்தாள் — சட்டென்று சுரந்த ஒரு கனிவுடன் அவன் அவளது தாடையைச் செல்லமாக வருடினான் — ''சியர் அப் யார்!'' அவள் மெல்லச் சிரித்தாள்.

''கார்த்திக், உன் முகத்தைச் சுற்றி ஒரு 'ஹேலோ' இருக்குன்னு சொல்வேனே, அதை நீ அந்நாத்திலேயே விட்டுட்டு வந்துட்டேன்னு நினைக்கிறேன்!''

ஒரு விநாடி திகைத்து அவன் சமாளித்துக் கொண்டு சிரித்தான்.

''நல்லவேளை. அது எங்கே என்னோடேயே ஒட்டிண்டிருக்குமோன்னு கவலைப்பட்டேன்!'',

(தொடரும்)

# அசையும் அஸ்திவாரங்கள்



அழுத்தமாக வாரி, ப்ரில்கிரீம் விளம்பரத்துக்கு நிற்கலாம் என்று அசத்தும், நரை மயிரே இல்லாத கருகருவென்ற அடர்த்தியான கேசம். ஷேவ் பண்ணி, பச்சை வெளிர் நிறம் படிந்த கன்னங்கள். கொஞ்சம் கூட சுருக்கம் விழாமல் சாந்தமாய்க் கவரும் முக அமைப்பு. க்ரீம் கலரில் பாண்டும் சூட்டும். கண்ணைப் பறிக்கும் நீல வண்ணத்தில் வழுவழுக்கும் 'டை'. அதைத் தோளில் ஸ்டைலாகப் போட்டவாறு ஸ்கூட்டரை நகர்த்துகிறார் சாரங்கன். எட்டரை மணிக்கெல்லாம் கல்லூரிக்குள் ஆஜராகி விடுவார். அவர் நுழைந்தாலே பிஸிக்ஸ் லாபரேட்டரி களைகட்டிவிடும். காலை ஸ்பெஷல் பிராக்டிகல் வகுப்புக்களில் பட்டாம்பூச்சி போல் தாவணிகளும் ஜீன்சுகளும் அணிந்த மாணவியர் அவரது கம்பீரத்தில் மயங்கி அவரை ஏறிட்டுப் பார்க்கத் திணறுவார்கள். மாணவர்களுக்கோ அவர் ஒரு முன்மாதிரி. அவரை மாதிரி இமிடேட் செய்து பேசுவதிலும், நடிப்பதிலும் குஷி. ஸ்போர்ட்ஸ் நடக்கும்போது வெண் பனியனையும் சிலுசிலுக்கும் மயிர் முழங்கால்களில் தெரிய அரைக் கால் சட்டையும் அணிந்து அவர் வந்து நின்றால் மைதானமே காணாது. அப்படி ஒரு கம்பீரம். உடையணிவதில் ஒரு டான் ஜுவான். கறுகறுப்பில் ஜேம்ஸ்பாண்ட்.

அந்த அழகிலும் கம்பீரத்திலும் மயங்கி மனத்தைப் பறிகொடுத்து அவரது கரம் பிடித்தவள்தானே கல்யாணியும்! என்னமோ, அவரது அழகெல்லாம் தனக்குச் சொந்தம் என்று எண்ணி இறுமாந்து பூரித்த நாட்கள் அவை!... அவர் லெக்சரராகச் சேர்ந்தபோது அவள் டிமான்ஸ்டிரேட்டராகச் சேர்ந்தாள். ஒரு வருடத்துக்குள் காதல் கனிந்து திருமணம். பரஸ்பர அன்பு பிரேமையாக உருவாகி, இப்போது வீட்டோடு குடும்பப் பெண்ணாக இருக்கிறாள் கல்யாணி. அவர் தொடர்ந்து புரொபஸராக வேலை பார்க்கிறார்.

கண்ணாடியில் தன்னைப் பார்த்துக் கொள்கிறாள் கல்யாணி. இரண்டு பெற்ற பிறகு வயிறு எப்படியோ சரிந்து போய்விட்டதே! அவருடன் 'கம்பேர்' பண்ணினால் அவள் பிரமாதமான அழகியொன்றும் அல்ல. ஆனாலும் திருமணத்தின்போது அது குறைவாகத் தோன்றவில்லை. இப்போது உடம்பும் உப்பிவிட்டது. இப்போது அவள் மாமி. விசேஷ நாட்களில் மடிசார் கட்டினால் அவரது விளையாட்டு வீரனைப் போன்ற வாலிபத்துக்கு முன் நிற்கக் கூசுவாள். தலையிலும் இதோ, அதோ என்று பல வெள்ளி மயிர்கள்.

கல்யாணத்துக்கு முன்னால் அவரது பிரமச்சாரி சேஷ்டைகளைக் கண்டு அவள் பெருமைப்பட்டிருக்கிறாள். பெண்களிடம் அவருக்கு எப்போதுமே ஒரு தாராளம். அவரைச் சுற்றி எப்போதுமே ஒரு வர்ண ஜாலம் நிற்கும். சிலசமயம் குறும்பாக மாணவிகளின் ஜாக்கெட்டில் குத்தியிருக்கும் பேனாவை எடுப்பார். செல்லமாக அவர்கள் ஜடையைப் பிடித்து இழுப்பார். முதுகைத் தட்டிப் பாராட்டுவார். இதெல்லாம் அவரது பிரிவிலேஜ்கள். யாரும் தப்பர்த்தம் காண முடியாது. முயன்றதில்லை. அவரது கம்பீரத்துக்கு முன் யாருமே எதிர்த்து வாதாடியதில்லை.



இப்போதும் என்ன?

"கல்யாணி இதைப் பார்த்தியா? ஜீனத் அம்மனோட படம். இந்த இந்தி நடிகைகள் எல்லாம் எப்படி உடம்பை டிரிம்மா, ஸ்லிம்மா வச்சிருக்கா பார்த்தியா? நம்ம தமிழ், மலையாள நடிகைகளும் இருக்காங்களே... அடிக்க வர்ற மாதிரி உடம்பெல்லாம் ஊதி தடிச்சுப் போய்... ஒரு விஷயம் கல்யாணி... என்னோட ஸ்டூடண்ட் பத்மப்ரியா இருக்காளே, அவ படிப்புக்கு முழுக்குப் போட்டுட்டாளாம். ஏன் தெரியுமா? ஏர்லைன்ஸ்லே ஏர்ஹோஸ்டஸ்ஸா வேலை கிடைச்சுட்டுதாம்! எனக்கு அப்பவே தெரியும், அவ... ஷபனு அஸ்மி மாதிரி, ஸ்ரத்தா பழகற பொண்ணு.. வெரி இன்டலிஜெண்ட்..." பெண்வாசனை இல்லாமல் பேச்சில்லை அவருக்கு.

"கல்யாணி, உன்னை மாதிரி எனக்கும் முடி கொஞ்சம் நரைக்க ஏதாவது மருந்து தாயேன்... என்னமா சீவிச் சீவிப் பார்க்கறேன். ஒரு முடியாவது சீப்புலே வரணுமே! புரொபசர்னுதான் பேரு... கொஞ்சம் முன் வழுக்கையோ, பின் வழுக்கையோ விழுந்தா எவ்வளவு நல்லா இருக்கும்... விழமாட்டேன்கிறதே!" கலகலவென்று சிரிக்கிறார்.

அவர் தம்மனைவியை மட்டம் தட்டுகிறாரோ இல்லை, இயல்பாகவே கள்ளங் கபடின்றிப் பேசுகிறாரா! கல்யாணி சமாளிக்கத் தெரியாமல் திணறுவாள்.

"போதுமே... வேண்டாத கவலை எதுக்கு உங்களுக்கு?..."

வாசலில் நிழலாடுகிறது.

சாயங்கால டியூஷன்.

பிரேமாவும் எலிசாவும் இறுதியாண்டு பி. எஸ். ஸி. மாணவிகள். இவரை ஆகர்ஷிக்கவோ இப்படித் தேவதை மாதிரி கண்ணைப் பறிக்கும் அலங்காரம்!... ஒதுங்கிக் கொள்கிறாள் கல்யாணி.

"ஸார்... இன்னிக்கு என்னோட பர்த்டே" பிரேமா அட்டைப் பெட்டியைத் திறந்து ஸ்வீட்டை நீட்டுகிறாள்.

"ஓ... ஸ்வீட் நைன்டீன்!... ஹாப்பி பர்த் டே டு யூ!" — அவர் கலகலத்துத் தான் பறக்கிறார், ப்ளேபாய் மாதிரி. நாற்பதைந்து வயதுக்குப் பொருந்தாத வாலிப முறுக்கு. வகுப்பில், லாபரேட்டரியில் இப்படியேதான் பறக்கிறாரோ? இளமை எண்ணங்களே இவரை வாலிபத்தின் கோட்டையிலிருந்து அகற்றாமல் மஜ்னுவாக; ரிஷி கபூராக வைத்திருக்கிறதோ? இதுதான் இவரது காயகல்பமோ?... கல்யாணிக்குள் நெருடல்கள் குமிழ்கின்றன.

அன்றைக்குக் காலை. அவர் கல்லூரிக்குப் போய் ஒரு மணி நேரம் கூட ஆகவில்லை. வயிற்றில் ஏதோ பிரளயம் மாதிரி அவளுக்கு. தலை சுற்றி வெளிச்சத் துண்டுகள் பூமாரி பெய்ய..., மயக்கமாய், சமாளித்துக்கொண்டு எப்படியோ போன் அருகே சென்று கல்லூரிக்குப் போன் செய்து சாரங்கனை விளிக்கிறாள்:

"உடனே வாங்க... எனக்கு என்னமோ பண்றது... என்னன்னு புரியலே... டாக்டரையும் கூட்டிண்டு வாங்க... சீக்கிரம்...." பதறி அரற்றுகிறாள். பேசுவதற்குள் விழி பிதுங்கி மயங்கிக் கீழே உட்காருகிறாள்.

சாரங்கன் ஸ்கூட்டரில் பதறிக்கொண்டு வருகிறார்.

"என்ன கல்யாணி... திடீர்னு என்ன வாச்சு?... நான் பயந்தே போயிட்டேன்... ஏதாவது ஃபுட் பாய்ஸனிங்கா?" டாக்டரும் உடன் வருகிறார். செக் அப் பண்ணுகிறார். மேலோட்டமாக.

"டிப்ரஷனாயிருக்கும். இந்த வயசில் பிரஷர் ஏறாமல் பார்த்துக்கணும்... எதுக்கும் என்னோட ஆஸ்பத்திரியிலே அட்மிட் பண்ணிடுங்கோ... இப்போ கவலைப்பட ஒண்ணுமில்லே... எல்லாம் டீடெய்லா செக் பண்ணணும்...."

சாரங்கன் கல்லூரிக்குப் பதினைந்துநாட்கள் லீவு போடுகிறார்.

டாக்டர் என்னவெல்லாமோ பரிசோதனை பண்ணுகிறார். ஈ. ஸி. ஜி., பிரஷர், யூரின், அது. இது... எல்லாம்.

"இட் ஈஸ் எ மைல்ட் அட்டாக். யோகா பண்ணினா சிலபேருக்குச் சரியாயிடும். சவாஸனா ஈஸ் குட். ஹை ப்ளட் பிரஷர்...." என்னவெல்லாமோ மாத்திரைகள். முதன் முறையாக அவற்றின் பெயர்கள் குறித்துக் கொள்கிறார் சாரங்கன்.

ஒரு மாதம் அப்படியே ஓட்டமாய் ஓட்டம்.

டிஸ்சார்ஜ் ஆகிக் கல்யாணி வீட்டுக்கு வந்து நாலு நாள் ஆகிவிட்டது. கூடவே ஒரு சமையற்கார மாமியும் இப்போது.

ரொம்ப நாளைக்கப்புறம் கல்லூரிக்குப் புறப்படுகிறார் சாரங்கன். கல்யாணி மெதுவாக எழுந்திருந்து அவரது சட்டையையும் கோட்டையும், டையையும் எடுத்து வைக்க .

நிலைக்கண்ணாடி முன் சாரங்கன்.

"இப்போஎதுக்கு எழுந்திருந்தேகல்யாணி? மாமிதான் இருக்காளே... டாக்டர் நீ நல்லா ஓய்வு எடுத்துக்கணும்னு சொல்லியிருக்காரோல்லியோ?" வாத்ஸல்யத்துடன் அவள் முதுகைத் தடவுகிறார் சாரங்கன்.

அவரது முகத்தை உற்று நோக்குகிறாள் கல்யாணி.

"என்ன அப்படிப் பார்க்கிறே கல்யாணி? மாமியை ஹார்லிக்ஸ் கரைச்சுக் குடுக்கச் சொல்லவா?"

ஏதோ உருத் தெரியாத ஏக்கம்.

ஒரு மாதத்துக்குள் இப்படியா?

ஏழெட்டு வெள்ளி மயிர்கள் ஓடின சாரங்கனின் வாரிவிடப்பட்டிருந்த தலையில். காதின் பக்கம் ஸைட் பர்ன்ஸ் வேறு லேசாக வெளுக்க ஆரம்பித்திருந்தது. முகம் கூடச் சற்றுக் கறுத்து வாடி, சுருக்கம் லேசாகப் படர்ந்து... வயதான தேவானந்த் மாதிரி....

ஒரு மாதத்துக்குள் இப்படியா?

"நீங்க ரொம்பத்தான் மாறிப் போயிட்டீங்க...."

"அப்படியா? ஒண்ணும் தெரியல்லியே எனக்கு..." சமாளிக்கும் சிரிப்பு. "எப்பவும் போலத்தானே இருக்கேன்!"

"ஒண்ணும் தெரியலியா? ஹாஸ்டல்லேருந்து சங்கரும் மைதிலியும் வருவாங்க இன்னிக்கு. அவங்களைக் கேளுங்க. அப்படியே உடைஞ்சு போயிட்டீங்க..." நொடித்துப் போகிறாள் கல்யாணி.

"சரி... நேரமாகிறது.... வரட்டுமா?"

ஷூக்கள் விசுவிசுக்க அவர் நடந்து செல்லும் போது புதிதாக ஒரு தொய்வு. ஓ... அந்தக் கம்பீரம் இப்போது எங்கே? லேசாக எப்போதும் சீட்டி அடித்துக் கொண்டே செல்லும் உற்சாகம் வற்றிவிட்டதா? இளமைக் களமாகத் திகழ்ந்த வனம் வறண்டு விட்டதா?

ஓ!...ஆண்களின் பலவீனமும் பலமும் பெண்கள்தானோ?... நான் சரியாக இருந்த வரைக்கும் அவர் கவலையின்றி இருந்தார். இப்போது எனக்கு வந்ததும் அவரும் உடைந்து விட்டாரோ?

கல்யாணியின் பார்வை வெறிக்கிறது.



ஆர்-டாக்குமெண்ட், பிரைஸ், மேன் போன்ற பல சிறந்த நாவல்களை அளித்த இர்விங் வாலஸின் சமீபத்திய நாவல் 'தி ஆல்மைட்டி' மிகப் பெரிய பத்திரிகை நிறுவனம் ஒன்றுக்குத் தலைவராகிறான் எட்வர்டு. அவனுடைய லட்சியம் தனது பத்திரிகையின் விற்பனை உலக சாதனையை எட்ட வேண்டும் என்பது. இதற்காக ஒரு கொலையாளியின் உதவியை நாடுகிறான். அவன் உலகின் மிகப் பெரிய தலைவர்களை இன்ன தேதியில் இன்ன நேரத்தில் கடத்துவது என்று தீர்மானிக்கிறார்கள். வேலை முடிந்தவுடன் கொலையாளி எட்வர்டுக்கு டெலிபோன் செய்வான். எட்வர்டும் மறு நாள் காலை மற்றப் பத்திரிகைகளில் வரு முன் தன் பத்திரிகையில் அந்தச் செய்தியைப் போடுவான். இப்படியே பல குறுக்கு வழிகளில் விற்பனையை அதிகரித்த எட்வர்டு, தன் பத்திரிகையில் வேலை செய்யும் பெண்ணால் போலீஸாரிடம் காட்டிக் கொடுக்கப்பட்டு மாட்டிக் கொள்கிறான். தற்கொலை செய்து கொள்கிறான்.

—கணபதி சுப்பிரமணியம்



# அந்தஸ்து!

அவசரமாக மேலதிகாரிக்கு அனுப்ப வேண்டிய ஃபைல் ஒன்று மேசையின் மேல் அப்படியே கிடந்தது. அலுவலகத்தில் வெட்டிப் பேச்சுக்களில், வீண் வம்புகளில் ஈடுபடாமல் 'ஒழுங்காகத் தன் வேலைகளைச் செய்கிறவள் ஜானகி ஒருத்திதான். 'வேலையில் கருத்துள்ளவள்' என்னும் பெயரே அவளுக்கு ஒரு மதிப்பையும், மரியாதையையும் தேடிக் கொடுத்திருந்தது!

அரசாங்கத் தொடர்புடைய வாரியம் ஒன்றில் அவள் வேலை பார்த்து வந்தாள்.

இன்று அடியோடு அவள் மன அமைதி குலைந்ததற்குக் காரணங்கள் இல்லாமலில்லை. காலையில் அலுவலகத்துக்குப் புறப்படும்போது அவள் அம்மா சொன்ன சில வார்த்தைகள் அவளை வெகுவாகப் பாதித்துவிட்டிருந்தன!

''நேத்து அப்படிச் சொன்னவங்க இன்னிக்கு வேறு விதமாகச் செய்தி சொல்லி அனுப்பிச்சிருக்காங்கடி! நீ குளிக்கிறப்போ அந்தப் புரோக்கர் வந்துட்டுப் போனான். அந்தப் புள்ளையாண்டான் அமெரிக்காவுக்குப் போய் ஒரு வருஷம் தங்கியிருந்து தொழில் சம்பந்தமான படிப்பு ஒண்ணு படிச்சுட்டு வரணுமாம். அதுக்கு ஆகிற செலவையும் நாம ஏத்துக்கிட்டா அவன் உன்னைப் பண்ணிக்கிறானும்! மத்த லௌகீகங்களோடு அந்தப் பணத்தையும் முன்னாடியே கொடுத்திடணுமாம்!''

''நேத்து ஏன் அப்படிச் சொன்னாங்களாம்?''

''வீட்டை வித்துத்தானே உன் அப்பா உன் கல்யாணத்தை முடிக்கணும்னு சொன்னார்! அவங்களை வித்தியாசமா நினைக்காம அப்படிச் சொல்லிட்டார்! வீட்டை வித்துட்டா அப்புறம் நாம் வாடகை வீட்டிலே குடியிருக்கிற ஏழைங்கதானே! 'ஏழைங்களையா நம்ம சம்பந்திங்கன்னு சொல்லிக்க முடியும்'னு அவுங்க நினைச்சிருக்கலாம்!''

''இன்னைக்கு எப்படிப் பண்ணிக்கிறோம்னு வர்றாங்களாம்? பெண் மூலம் பொருள்தானே முக்கியம்; அப்புறம் யார் எப்படிப் போனால் என்னன்னு நினைச்சுட்டாங்களாமா? நேத்து அவங்க என்னைப் பண்ணிக்க மாட்டோம்னு சொன்னப்ப நான் வருத்தப்படவுமில்லை. இன்னிக்குப் பண்ணிக்கிறோம்னு சொல்றப்ப



நான் சந்தோஷப்படவுமில்லே. நான் நானுத்தான் இருக்கேன்!''

''நேத்து மத்தியானம் உன் அக்காமார் ரெண்டு பேரும் வந்திருந்தா. 'இந்த விட்டை விக்கப்படாது. பிற்காலத்திலே எங்களுக்கு இது வேணும். ஜானகி சேர்த்து வைச்சிருக்கிற பணத்துலே அவள் கல்யாணத்தை முடிச்சுக்குங்கோ, விட்டை விக்க விட மாட்டோம்'னு சண்டை போட்டுட்டுப் போயிருக்கா... உன் அப்பாவுக்கு இந்தச் சம்பந்தம் ரொம்பப் பிடிச்சிருக்கு. அவா அந்தஸ்து அவருக்குப் பெரிசாப் படுது!... விட்டை வித்தாலும் ஒரு லட்சத்தைத் தாண்டாது. உன் பணத்துலே ஒரு காசைக் கூடத் தொடாமல், பூர்விக நகைகளையும் வித்தாவது இந்த வரனை முடிச்சுடணும்னு தீர்மானிச்சிருக்கார்! உனக்கும் சம்மதிக்கிறதைத் தவிர வேறு வழியில்லே!''

''என்னை யாரும் எதுக்காகவும் கட்டாயப்படுத்த முடியாது அம்மா! அதை முதல்லே தெரிஞ்சுக்கணும்!''

அவளுக்கு 'மூட்' மாறிவிட்டது. காலையில் சாப்பிடாமலும், மத்தியானத்துக்கு டிபன் எடுத்துக்கொள்ளாமலும் அவள் புறப்பட்டுவிட்டாள். தெருக்கோடியில் நொண்டி ஐயர் டீக்கடை வாசலில் ஜானகிக்காகக் காத்துக்கொண்டிருந்த சிறுமிகள் ராஜியும் அவள் சகோதரிகளும் இப்போது ஜானகியைப் பார்த்துக் குதூகலத்துடன் ஓடிவந்து, ஒரு பெருமிதத்துடன் அவளோடு சேர்ந்து நடக்கத் தொடங்கினர். மெயின் ரோட்டில் கொஞ்ச தூரத்தில் அவர்கள் பள்ளி இருந்தது. அந்தப் பள்ளி வரை ஜானகியுடன் சேர்ந்து நடப்பதில் அவர்களுக்குத் தனி உற்சாகம்.

''ஏன் மன்னி! உங்க கல்யாணம் நிச்சயமாயிடுத்தா? எங்களுக்கெல்லாம் எப்போ ஸ்வீட்ஸ் வாங்கிக் கொடுக்கப் போறீங்க? எங்க கடையிலேயே வாங்கிக் கொடுங்க மன்னி, போதும்!''—ராஜி நடந்துகொண்டே சொன்னாள். அவள் சொல்லி முடித்தவுடன் அவள் தங்கை ஜானகியைப் பார்த்து, ''மன்னி, எத்தனை நாளா உங்களை எங்க கடைக்கு வந்து ஒரு கப் காப்பி சாப்பிட்டுப் போங்கன்னு நாங்க கூப்பிட்டுக்கிட்டிருக்கோம்! ஏன் வர மாட்டேங்கறீங்க? கேவலம்னு நினைக்கிறீங்களா? சாயங்காலம் நம்ம கடைக்கு வர்றீங்களா?'' என்று கேட்டாள்.

அந்தச் சிறுமிகளை அப்படியே வாரி அணைத்துக் கொள்ள வேண்டும் போலிருந்தது ஜானகிக்கு.

அந்தப் பெண்கள் ஜானகிக்கு டாடாச் சொல்லிவிட்டுத் தங்கள் பள்ளிக்குள் நுழைந்த பின்னரே அவள் அப்பால் நகர்ந்தாள்.

**போ**ன வாரத்தில் நகரிலேயே பெரிய விளம்பர ஏஜன்ஸி ஒன்றின் அதிபருடைய மகன் வந்து அவளைப் பெண் பார்த்துவிட்டுப் போனான். இருபத்தையாயிரம் ரூபாய் ரொக்கம், இருபத்தைந்து பவுன்களுக்கு நகைகள், வைர மோதிரம் ஒன்று! சீர் வரிசைகள் தனியாக! கல்யாணத்தையும் நடத்தி வைக்க வேண்டும்! இவை யாரையும் கேளாமலே, தன் வசதிகளையும் உணராமலே ஜானகியின் அப்பா ஒத்துக்கொண்ட வௌகேங்கள்! ஆனால், நேற்று ஒரு பதில் வந்தது. இன்று வேறு பதில் வந்திருக்கிறது! 'இந்த விஷயங்களை யெல்லாம் அந்த மழலைகளால் எப்படிப் புரிந்து கொள்ள முடியும்?'

ஜானகியின் அப்பா ஒரு காலத்தில் தஞ்சை மாவட்டத்து மிராசுதாரர்களில் ஒருவராயிருந்தவர். விவசாயிகள் கிளர்ச்சி அதிகரித்திருந்த சமயம், பூர்வீகச் சொத்துக்களான பத்து வேலி நன்செய், புன்செய் நிலங்களையும் வந்த விலைக்கு விற்றுவிட்டுப் பட்டணத்தில் குடியேறினார் அவர். மூன்று வீடுகளை வாங்கிப் போட்டார்; மிச்சப் பணத்தைப் பாங்குகளில் டெபாசிட் செய்தார். எந்தத் தொழிலிலும் ஈடுபடாமலும் எந்த வேலையும் செய்யாமலும் வட்டி வருமானத்திலும் வாடகைப் பணத்திலும் வாழ்க்கை நடத்தத் தொடங்கினார். ஜானகியின் சகோதரிகள் இருவருக்கும் படிப்பு ஏறவில்லை. இரண்டு வீடுகளை விற்றே அவ்விருவருடைய கல்யாணங்களையும் நடத்தி முடித்தார் ஜானகியின் அப்பா. இப்போது மிஞ்சியிருப்பது ஒரு வீடுதான்! டாம்பீகத்திலும், போலி கௌரவத்திலுமே வாழ்ந்து பழக்கப்பட்டவர் அவர்! நாளைக்கு என்ன வழி என்பது பற்றிச் சிந்திக்கத் தெரியாதவர்! எல்லாரையும் பற்றியும் எல்லாருக்குமாகவும் சிந்திக்க வேண்டிய பொறுப்பு ஜானகிக்கு ஏற்பட்டிருந்தது!




அவள் ஏறவேண்டிய பஸ் வந்தது; புறப்பட்டது.

அலுவலக நேரம் முடிந்து எல்லாரும் புறப்பட ஆயத்தமாயினர். ஜானகி அவசரமாக ஒரு ஃபைலைப் புரட்டினாள். அதே அவசரத்தில் அதை மூடி அப்பால் தூக்கிப் போட்டாள். ஒரு கடிதம் எழுதினாள்; அதை உறையிலிட்டு ஒட்டித் தன் கைப் பையில் வைத்துக் கொண்டாள். பின்னர், எல்லாருடனும் அவளும் புறப்பட்டாள்.

**தெ**ன் தெருவில் நொண்டி ஐயர் டீக் கடையை நெருங்கிக்கொண்டிருந்தாள் அவள்.

அந்த டீக்கடைக்குச் சொந்தக்காரனின் பெயர் வேங்கட சுப்பிரமணியன் என்பது. அது 'வெங்கு' எனச் சுருங்கி யிருந்தது. ஏழைக் குடும்பத்தில் பிறந்து, ஏழையாகவே வளர்ந்த அவன், ஏழைமை நிலையிலும் எப்படியோ கஷ்டப்பட்டு பி.ஏ. படித்து முடித்திருந்தான். வேலை கிடைக்கவில்லை. அவன் பிறந்து பல ஆண்டுகள் கழிந்த பின்னரே அவனுக்குச் சகோதரிகள் பிறந்திருந்தனர். கொஞ்ச காலத்திற்கு முன்பு ஒரே வருடத்தில் அவன் பெற்றோர் இருவருமே காலமாகி விட்டனர். அவன் நண்பன் ஒருவனின் டீக்கடையில் சில மாதங்கள் பயிற்சி பெற்றான். பின்னர் தன்னம்பிக்கையோடு தானே ஒரு டீக்கடையைத் தொடங்கினான். வெங்குவுக்குத் தான் செய்யும் தொழிலில் ஒரு பிடிப்பும், ஆர்வமும் பூரணமாக ஏற்பட்டிருந்தது!

அவனுக்கு வயது முப்பதுக்குள்தான் இருக்கும். இடகாத்திரமான உடம்பு. ஒரு காலில் மிக இலேசான ஊனம் ஒன்றும் அவனுக்கு இருந்தது.

டீக்கடையை யொட்டிய ஓட்டுச்சார்ப்பில் தான் வெங்குவும் அவன் சகோதரிகளும் வசித்து வந்தனர்.

ஜானகிக்கு இப்போது உடலிலும் உள்ளத்திலும் ஒரு பரபரப்பு ஏற்பட்டது. அவள் சட்டென அந்த வீட்டினுள் நுழைந்தாள்.

அங்கே காப்பியை மட்டும் பருகினாள். பின்னர், கைப்பையைத் திறந்து, அலுவலகத்தில் எழுதிய கடிதத்தை எடுத்து, ''உன் அண்ணா இங்கே வந்தப்புறம் அவர் கிட்டே கொடுத்துடு!'' எனச் சொல்லி அதை ராஜியின் கையில் கொடுத்தாள்.

பிறகு வீடு அடைந்து தன் அறைக்குள் நுழைந்து, 'படார்' எனக் கதவை அறைந்து சாத்திக்கொண்டு கட்டிலில் விழுந்தாள்.

மறுநாள் பொழுது விடிந்தது.

**அ**திகாலையிலேயே விழித்தெழுந்து வெளியே வந்தாள் ஜானகி. அவளுக்கு முன்னமேயே அவள் தாயும் தந்தையும் எழுந்து விட்டிருந்தது அவளுக்கே ஆச்சரிய மளித்தது.

''இப்பக் காத்தாலே அவா வூட்டுக்குப் போய்ப் பேசிட்டு வரணுங்கிறார் உன் அப்பா! உன் சம்மதம் தெரிஞ்சாத்தானே அது முடியும்? உன்னைக் கேட்கச் சொல்றார்!'' என்றாள் அவள் தாய்.

''இன்னும் கொஞ்ச நேரத்திலே நான் சொல்லாமலே எல்லாம் தெரியும்!'' என்ற

நீதிபதி: ''மறுபடியும் மறுபடியும் அந்தக் கடையிலேயே போய்த் திருடியிருக்கிறாயே, ஏன்?''

திருடன்: ''அந்தக் கடையிலே 'நன்றி மீண்டும் வருக''ன்னு போர்டு போட்டிருக்குங்க.''

—எஸ்.ஏ.ஜெய்.



ஜானகி, மேலே எதுவும் பேசாமல் குளிக்கப் போனாள்.

சற்றைக்கெல்லாம் வெங்குவும் அவன் சகோதரிகளும் அந்த வீட்டுப் படி ஏறி உள்ளேவந்து தங்கள் கைகளிலிருந்த பொருள்களைக் கூடத்தில் வைத்தனர். அவர்களை வாசலில் பார்த்தவுடனேயே விரைந்து சென்று அழைத்து வந்தவள் ஜானகிதான்!

சத்தம் கேட்டு அறைக்குள்ளிருந்து வெளி வந்த ஜானகியின் அப்பா, வெங்குவைப் பார்த்துக் கடுங்கோபத்துடன், ''என்னடா இதெல்லாம்? எங்கே வந்தே?'' என்றார்.

''ஜானகியைப் பெண்கேட்க வந்திருக்கேன்!''

''எலே, நொண்டிப் பயலே! பொறுக்கி ராஸ்கல்! என்ன திமிருடா உனக்கு? எங்க அந்தஸ்து என்ன, உன் யோக்யதை என்னன்னு தெரியுமாடா உனக்கு? பேசாமல் இந்தச் சாமான்களை எடுத்துக்கிட்டு இப்பவே வெளியே போயிடு! இல்லாட்டி, உங்களைச் செருப்பாலே....!''

ஜானகி அவசரமாகக் குறுக்கிட்டாள். ''அப்பா! உங்க மரியாதையை நீங்களே கெடுத்துக்கிறீங்க! 'அந்தஸ்து கிந்தஸ்து'னு பேசினீங்களே, அந்த அந்தஸ்து உங்ககிட்ட இருக்கா? அந்த வார்த்தைக்கு அர்த்தமாவது உங்களுக்குத் தெரியுமா?... அவரை வரச் சொல்லிக் கடிதம் எழுதினவளே நான்தான். அவர் கிட்டப் பேசணும்னு மரியாதை தவறாமப் பேசணும். அதுதான் நல்லது!''

அவள் சட்டெனக் கீழே குனிந்து, வெங்கு வாங்கி வந்திருந்த பொருள்களில் பூச்சரத்தைக் கையில் எடுத்து அதில் கொஞ்சத்தைக் கிள்ளித் தன் தலையில் சூடிக் கொண்டாள். குங்குமத்தை எடுத்து நெற்றியில் இட்டுக் கொண்டாள். ஜானகியின் தாயும் தந்தையும் வாயடைத்துப் போய் நின்றனர்.

அதே நேரத்தில், முதல் நாள் வந்து போன புரோக்கர் உள்ளே நுழைந்தான். அவனுக்கு அந்தச் சூழ்நிலை புரியவில்லை. எனினும் அவன் ஜானகியின் தந்தையைப் பார்த்துச் சற்றுத் தடுமாற்றத்துடன் பேசத் தொடங்கினான். ''அவாதான் என்னை அனுப்பிச்சா. வீட்டை விக்கணும்னு சொன்னீங்கல்லே, அவாகிட்டயேதான் அதை விக்கணுமாம்! ஒரு நியாயமான விலைக்கு அவாளே அதை வாங்கிக்கிறாளாம்! அதுக்கப்புறம்தான் கல்யாணத்தை நிச்சயம் பண்ண முடியும்னு சொல்றா! உங்க அபிப்பிராயம் என்ன?''

ஜானகிக்குக் கடுங்கோபமே ஏற்பட்டு விட்டது. கையை ஓங்கிக் கொண்டு வேகமாக அவனை நெருங்கினாள் அவள். வெங்கு குறுக்கிட்டுத் தடுத்தான்! ''செய்யற தொழில்லேயும் ஒரு நேர்மை இருக்கணும்!... ம்ம், போ, வெளியே!''

''போடா வெளியே!'' — ஜானகியின் தந்தையும் அவனைப் பார்த்துச் சொன்னார்.

அவன் ஓடிப்போனான்.

ஜானகி, தன் தகப்பனார் பக்கம் திரும்பி, ''அப்பா, என்மேல் வருத்தப்பட்டுக்காதீங்க. நான் ஒரு மாதிரி, மலை மாதிரி நின்னுக்கிட்டு அடிவாரத்தை இன்னும் ஆழமாக்கவே நினைக்கிறவங்களுக்கெல்லாம் இந்தச் சமூகத்திலே அந்தஸ்து இருக்கும்னு, அந்த அந்தஸ்தை என் கால்களிலே போட்டு மிதிக்கவே நான் தயாராயிருக்கேன்! பக்கத்திலே இருக்கிற பள்ளத்தைக் கொஞ்சமாவது தூர்க்க முடியுமான்னு நினைக்கிறவங்க கால்களிலே விழுந்து வணங்கவும் நான் தயார்தான். அறிவிலே, உழைப்பிலே, திறமையிலே நம்பிக்கை வைச்சு வாழ ஆசைப்படறவங்கதான் உண்மையான அந்தஸ்துக்கு உரியவங்கன்னு நான் நம்பறேன். வெறும் மனக் கிளர்ச்சி வாழ்க்கை எனக்குப் பிடிக்கலே. என் புருஷனை நான் மதிச்சா, என்னைச் சேர்ந்தவங்களும் மதிப்பாங்க; அப்புறம் ஊரும் மதிக்கும்!... அப்பா! உங்க விருப்பப்படி என்னாலே நடத்துக்க முடியல்லியேன்னு எனக்கும் வருத்தம்தான். என்ன செய்யறது? என்னை மாத்திக்க முடியல்லியே!... இந்த வீடு எனக்கு வேண்டாம். உங்களுக்குப் பிறகு அக்காள்களே இதை எடுத்துக்கட்டும்!'' என்றவள், பின்னர், வெங்குவைப் பார்த்து, ''உங்களுக்குக் காப்பிகூடக் கொடுத்து உபசரிக்க முடியாத நிலையில இப்ப நான் இருக்கேன். பரவாயில்லே. போய்க் கல்யாணத்துக்குத் தேதி நிச்சயம் பண்ணுங்க. பாங்கியில் என் கணக்கில் இருபத்தையாயிரம் ரூபாய் இருக்கு. நான் சம்பாதிச்சுச் சேர்த்து வெச்சிருக்கிற பணம்! அதிலே பத்தாயிரம் ரூபாயைக் கல்யாணத்துக்கு எடுத்துக்கலாம். மிச்சத்தை உங்கள் தொழில் அபிவிருத்திக்குப் பயன்படுத்திக்கலாம். வீடு வாசல்லாம் அப்புறம் பார்த்துக்குவோம்!'' எனவும் கூறினாள்.

''நானும் பணம்வெச்சிருக்கேன் ஜானகி!'' வெங்கு சொன்னான்.

''உட்காருடா வெங்கு!'' — ஜானகியின் அப்பா சொன்னார், தம் கண்களைத் துடைத்தபடியே!

'உட்காருங்கோன்னு சொல்லுங்கோ!''— சட்டென்று ராஜி சொன்னாள், ஜானகியின் தந்தையைப் பார்த்து! எல்லாரும் சிரித்தனர். வெங்கு உட்கார்ந்தான்.

தன்னிரு கரங்களாலும் வெங்குவின் சகோதரிகள் மூவரையும் சேர்த்து அணைத்துக் கொண்டாள் ஜானகி!

# எப்படி சமாளிக்கிறார்கள்?

நடிகர் ரஜினிகாந்த் 150 ரூபாய் கொடுத்துத் தண்ணீர் வாங்குகிறார்
-பத்திரிகைச் செய்தி

வேறு பல பிரபலஸ்தர்கள் எப்படிச் சமாளிக்கிறார்கள்? கேட்டோம்.

**சிவகுமார்**

பல் தேய்க்கும்போதும், ஷேவிங் செய்து கொள்ளும்போதும் எப்படி யெல்லாம் தண்ணீரை மிச்சப்படுத்துவது என்பதற்குச் சிங்கப்பூரில் பெரிய நட்சத்திர ஹோட்டல்களில் கூட ஒவ்வொரு அறையிலும் டிப்ஸ் எழுதி வைத்திருக்கிறார்கள்! தண்ணீரின் அருமையை உணர்ந்தவர்கள் அவர்கள். அங்கு தேசம் முழுவதற்கும் தண்ணீர் காசு கொடுத்து வாங்கப்படுகிறது.

கார்ப்பரேஷன் பிளஸ் கிணறு - இரண்டு தண்ணீரையும் கலந்து இரண்டு நாட்களுக்கு ஒருமுறை ஓவர்ஹெட் டாங்கில் நிரப்புகிறோம். வீட்டில் ஜனத்தொகை கம்மிதான். சமாளிக்க முடிகிறது. தோட்டத்துக்கு ஒரு நாள் விட்டு ஒருநாள்தான் தண்ணீர்.





**வக்கீல் என். சி. ராகவாச்சாரி**

கார்ப்பரேஷன் தண்ணீர் விடியற்காலை நான்கு மணிக்கு ஒரு நாள் விட்டு ஒரு நாள் வருகிறது. அதோடு போட்டி போட்டுக் கொண்டு வீட்டுக் கிணற்றிலும் ஒரு நாள் விட்டு ஒரு நாள் தான் ஊற்று வருகிறது!

ஹார்டி கல்சரல் சொஸைடியின் ஆயுள் அங்கத்தினர் என்ற முறையில் நல்ல தோட்டம் வைத்திருந்தேன். தண்ணீர் கஷ்டத்தில் புல் தரை போச்சு. இருநூற்றுக்கும் மேலான ரோஜாச் செடிகளை நகரின் வெளியே இருக்கும் பிள்ளைகள் வீட்டுக்கு அனுப்பியுள்ளேன்.



**குமரி அனந்தன்**

அண்ணாசாலை அரசினர் குடியிருப்புப் பகுதியில் நான் இப்போது குடும்பத்துடன் இருக்கிறேன். எனக்குப் பல சௌகரியங்கள் செய்து கொடுத்துள்ளார்கள். தண்ணீர் நன்றாகவே வருகிறது. பிரச்னையே இல்லை.



**ஜெயராஜ்**

ஒரு நாள் விட்டு ஒரு நாள் காலை 5 முதல் 8–30 வரைதான் கார்ப்பரேஷன் தண்ணீர் வருகிறார்! அப்படியே அவரைக் கோழி அமுக்குவது மாதிரி அமுக்க வேண்டும். என் கார் டிரைவரை எக்ஸ்ட்ரா அலவன்ஸ் கொடுத்துத் தண்ணீர் அடிக்க ஏற்பாடு செய்துள்ளேன். என் டிரைவர் உடம்பில் நோஞ்சான் என்றாலும் உள்ளத்தில் வலிமை மிக்கவர். ... அவருக்கு உதவு...

கிறார்கள். என்னே என் மனைவி அனுமதிப்ப... இந்தக் கரங்களுக்கு அவ்வளவு யம் தீட்டும் இந்தக் கரங்களுக்கு அவ்வளவு மதிப்பு! அப்புறம் ஸ்ட்ரோக் தடுமாறுமாம்!



**எஸ். பி. முத்துராமன்**

ஏ.வி.எம். ஸ்டுடியோவைத் தாண்டி அவிச்சி உயர்நிலைப் பள்ளியை அடுத்து இருக்கும் எங்கள் குடியிருப்புக் காலனியான ஏவி. எம். நகரில் எங்களுக்கு கார்ப்பரேஷன் தண்ணீர் கிடையாது. ஏவி. எம். டிரஸ்டில் பெரிய கிணறு எடுத்து நாற்பது வீடுகளுக்குத் தண்ணீர் சப்ளை செய்கிறார்கள்.

தவிர, வீட்டில் இருக்கும் கிணற்று நீரையும் உபயோகப்படுத்துகிறோம். வீட்டுக் கிணற்றில் நீர் மட்டம் இறங்கிக் கொண்டிருக்கிறது. இப்போது சரி, ஒரு மாதத்துக்குப் பிறகு? முருகன்தான் காப்பாற்ற வேண்டும்.





**சரோஜினி வரதப்பன்**

நீண்ட நாட்களாக கார்ப்பரேஷன் தண்ணீரே வருவதில்லை. அர்த்த ராத்திரியிலோ, விடியற்காலையிலோ கைப் பம்பில் அடித்தால் இரு நாட்களுக்கு ஒருமுறை தண்ணீர் கொஞ்சம் வருகிறது. அப்போதும் தண்ணீர் வரும் நேரம் ஸஸ்பென்ஸ்! தண்ணீர் வருவதற்கு பம்ப் அடிப்பதை விட எப்போது அடித்தால் வரும் என்று கண்டுபிடிக்க அதிக நேரமும் உழைப்பும் செலவழிகிறது.

எங்கள் வீட்டிற்கு முன்பு வாசலில் ஒரு பெரிய கிணறு இருக்கிறது. அதன் உதவியால்தான் ஓரளவு சமாளிக்கிறோம். இருபது பேர் இருக்கும் குடும்பத்துக்கு நீர் கொடுத்து அந்தக் கிணறும் வறண்டு வருகிறது. என்று கைவிடுமோ?

**இந்துமதி**

பதினைந்து நாட்கள் முன் இருந்த நிலைமையை விட இப்போது பரவாயில்லை. தண்ணீர் அளிக்கட்டும் இல்லாமல் அத்திப் பட்டுக் கிராமம் மாதிரி கஷ்டப்பட்டோம். இரவு 1 மணிக்கு அம்மா வீட்டுக்குக் காரில் போய் தண்ணீர் கொண்டு வருவேன். கிணற்றில் ஊர் வார ஓர் ஆளை ஏற்பாடு செய்தேன். பாதியிலேயே விட்டு விட்டு ஓடிவிட்டான். திரிசங்கு சுவர்க்கம் மாதிரி ஆகிவிட்டது. இதைப் படித்தாவது ஓடிப்போனவர் திரும்பி வருவார் என எதிர்பார்க்கிறேன்.



பேட்டி: செந்தி

# வாழ்க்கை வாழ்வதற்கே!

டாக்டர் இ. ஷாஹுல் ஹமீது

**பருவ காலங்கள் !**

பிறப்புக்கும், இறப்புக்கும் இடைப்பட்ட காலம் தான் வாழ்க்கை! இதில் குழந்தைப் பருவம், இளமைப் பருவம், வாலிபப் பருவம், இடைநிலைப் பருவம், முதுமைப்பருவம் எனப் பல பருவ காலங்கள் பூத்துக் குலுங்குகின்றன! வாழ்க்கையின் எல்லாப் பருவங்களிலும், உடல் நலத்தோடும், மன வளத்தோடும் வாழவேண்டும் என்பதற்காகவே இறைவன் நம்மைப் படைத்திருக்கிறான். ஆனால், நாமோ தவறான நடவடிக்கைகளில் ஈடுபட்டு இந்த அரிய வாழ்க்கையைப் பாழ்படுத்திக்கொள்கிறோம். முற்பகல் செய்த வினையின் பயனைப் பிற்பகலில் அறுவடை செய்கிறோம்! உரிய காலத்தில், உரிய முறையில், இந்த வாழ்க்கையை நாம் வாழாத காரணத்தால், பிறவிப் பெரும் பயனை இழந்து விடுகிறோம்!

**இளமையில் முதுமை ஏன் ?**

ஆரோக்கியம் குன்றிய பெற்றோர்களுக்குப் பிறக்கின்ற குழந்தைகள் அவ்வப்போது நோய் நொடிகளுக்கு ஆளாகி நோஞ்சான்களாக வளர்கின்றனர். உடலும், உள்ளமும் நோயுற்ற நிலையில், இளமைப் பருவத்தை எய்துகின்ற இவர்கள், சுற்றுப்புற சூழ்நிலைகளின் காரணமாக, அறியாமை என்னும் இருளில் இடறி விழுந்து, வாலிபத்திலேயே வயோதிகத்தை அடைந்து விடுகிறார்கள். குழிவிழுந்த கண்களும், களையிழந்த முகமும் அவர்கள் பிஞ்சிலே பழுத்தவர்கள் என்பதை அடையாளம் காட்டுகின்றன. எதிர்கால இன்ப வாழ்வு என்பது அவர்களுக்கு கானல் நீராகவே காட்சி அளிக்கிறது.

**துன்பத்தின் தொடர்கதை !**

இன்பத்தின் நிறைவு கோலாக இருக்க வேண்டிய திருமண வாழ்க்கை துன்பத்தின் தொடர் கதையாகி நெஞ்சத்தை நெருடிக் கொண்டேயிருக்கிறது. வசந்த காலம் கசந்து விடுகிறது. மனத்தின் உணர்ச்சிகளுக்கும், எழுச்சிகளுக்கும் ஈடுகொடுக்க முடியாமல், உடலும் உறுப்புகளும் ஓய்ந்து விடுகின்றன.

**கனவாய், பழங்கதையாய்...**

வாழ்க்கைப் போராட்டத்தில் அலுத்து சலித்த நடுத்தர வயதினரின் நெஞ்சத்திரையில் தங்கள் வசந்த கால இன்ப நிகழ்ச்சிகள் நிழலாடுகின்றன. இன்று, அவர்கள் உடலும் உள்ளமும் சோர்ந்து ஓய்ந்திருக்கும் நிலைமையில், அவையெல்லாம் வெறும் கனவாய், பழங்கதையாய் மாறி விட்டதே என்று மனம் பதைக்கின்றனர். வாழ்க்கையை முழுமையாக அனுபவிக்க வழி இல்லையோ என்று ஏங்குகின்றனர்.

**சித்தர்களின் பரிகாரம் !**

இத்தகைய நிலைமைகளுக்கெல்லாம் அன்றைய சித்தர்கள் ஆராய்ந்து நிவாரணம் கூறி இருக்கிறார்கள். அன்றைய மெய்ஞ்ஞான முறைகளை இன்றைய விஞ்ஞானக் கண்ணோட்டத்தில் விரிவாக ஆராய்ந்ததன் விளைவாக எங்கள் காய கல்பம் உருவாக்கப் பட்டிருக்கிறது. தங்கம், வெள்ளி, இரும்பு முதலிய நவலோக பற்பங்கள் நவீன முறையில் விரியப்படுத்தப்பட்டு இந்த காய கல்பத்தில் சேர்க்கப்பட்டிருக்கின்றன.

**அனைவருக்கும் ஏற்றது !**

இளம் பருவத்தினர் முதல் முதியவர்கள் வரை, ஆண், பெண் ஆகிய இருவரும் உட்கொண்டு பயன் பெறத்தக்க வகையில் இந்த காய கல்பம் அமைந்திருக்கிறது. எதிர்கால இன்ப வாழ்க்கையைப் பாழ்படுத்திக் கொண்ட இளைஞர்களுக்கும், யுவதிகளுக்கும் வாழ்க்கையை முழுமையாக அனுபவிக்கத் துடிக்கும் நடுத்தர வயது தம்பதிகளுக்கும், மற்றும் முதுமையிலும் இளமை உணர்வை விரும்புகிற அனைவருக்கும் இந்த காயகல்பம் ஒரு கைகண்ட மருந்து.

**ஹெர்பல் மசாஜ் க்ரீம்**

காய கல்பத்தோடு இணைந்து வெளிப்பூச்சாகப் பயன்படுத்த **ஹெர்பல் மசாஜ் க்ரீம்** என்ற மூலிகை தேய்ப்பு மருந்தும் உருவாக்கப்பட்டிருக்கிறது. ஊளைச் சதையைக் குறைக்கவும், உடலுறுப்புக்களை உரமேற்றவும், தசைவலிகளைப் போக்கவும் இந்த மூலிகை தேய்ப்பு மருந்து பயன்படும்.

**இதர தயாரிப்புகள்**

முடி உதிர்ந்து கொட்டுவதை நிறுத்தவும், முடிகள் கருகரு என்று வளரவும் உதவி செய்யக் கூடிய **ஹெர்பல் ஹேர் க்ரீம், ஹெர்பல் ஹேர் டானிக்,** குற்றாலத்தில் குளித்தது போன்று குளுமை ஊட்டக் கூடிய **ஹெர்பல் ஹேர் கேர்** என்ற மூலிகை ஷாம்பு, முகத்தை வசீகரமாக வைத்துக் கொள்வதற்கு பிம்ப்ளக்ஸ் என்ற முகப்பரு நிவாரணி, பற்களை ஆரோக்கியமாகப் பாதுகாக்க மூலிகை பற்பொடி முதலிய மருந்துகளையும் விஞ்ஞானப் பூர்வமாக தயாரித்து வழங்கி வருகிறோம்.

எங்கள் மருந்துகள் தற்போது தமிழகத்தில் எல்லா இடங்களிலும் கிடைக்கின்றன. வெளிநாடுகளுக்கும் ஏற்றுமதியாகின்றன.'

**மருத்துவமனை**

எங்கள் அலுவலகம், சென்னை **புதுப் பேட்டை ஹாரிஸ் ரோட்டில்** (எழும்பூர் மெட்ரோ பாலிட்டன் மாஜிஸ்திரேட் கோர்ட்டுக்கு எதிரில்) மாடியில் அமைந்திருக்கிறது. அங்கு எல்லா வியாதிகளுக்கும் சிறந்த சிகிச்சையளிக்கப்படும். காலை 10 மணி முதல் 1 மணி வரையிலும், மாலை 5 மணி முதல் 8 மணி வரையிலும் ஞாயிற்றுக்கிழமைகளில் காலையில் மட்டும் மருத்துவமனை இயங்கும்.

**கிரௌன் ஹெர்பல் ப்ராடக்ஸ், 55, ஹாரிஸ் ரோடு, சென்னை-600 002**

ADVT

# விஷப் பரீட்சை

அந்தப் பெரிய ஆஸ்பத்திரியின் காலனிக்குள் கார் நுழைகையில் இரவு பன்னிரண்டு மணிக்கு மேலிருக்கும். சற்று முன் ஓய்ந்து விட்டு ஓய்ந்த மழை காரணமாகத் தார் ரோடு பளபளவென்று மின்னியது. வரிசையாகக் கட்டப்பட்டிருந்த குவார்ட்டர்ஸ்கள் மோனத்தில் ஆழ்ந்திருந்தன. வடகோடியிலிருந்த ஆஸ்பத்திரி 'வார்டு'களில் மட்டும் மங்கலாக வெளிச்சம் தெரிந்தது.

கார் திசை திரும்பியவுடன் ஆராய்ச்சி சாலையிலிருந்து தோன்றிய திடீர் 'பளிச்' ஒளி அனைவரது கண்களையும் கூச வைத்தது. இத்தனை நேரம் தாம் பார்த்த சினிமாவைத் தீர்க்கமாக விமர்சித்துக் கொண்டிருந்த இளம் டாக்டர்கள் இப்பொழுது சந்துருவைப் பற்றிப் பேசத் தொடங்கினார்கள்.

''பயல் இன்னும் தூங்கவில்லை. சரியான ஆராய்ச்சி வெறி.''

''இவனுக்கு வெற்றி கிடைக்குமா?''

''அனுபவப்பட்ட மேதைகளினால் தீர்த்து வைக்க முடியாத பிரச்னையை இந்தக் கத்துக் குட்டிதான் தீர்த்து வைக்கப் போகுதாக்கும்.''

''வெற்றி கிடைக்கிறதோ இல்லையோ, அவன் வெறியைப் பாராட்டாமல் இருக்க முடியாது.''

''இப்படி விஞ்ஞான உலகில் எத்தனையோ பித்தர்கள் இருக்கிறார்கள். அவர்கள் எல்லாம் என்னத்தைச் சாதித்துவிட்டார்கள்?''

''இவன் சமாசாரமே வேறு. அப்பா தொடங்கி நடுவில் விட்ட ஆராய்ச்சியை வெற்றிகரமாக முடித்தே தீருவது என்ற பிடிவாதத்துடனல்லவா இவன் பணியாற்றுகிறான்?''

''அப்பா ராகவாச்சாரி ஒரு 'எக்ஸென்டிரிக்.' பிள்ளை அதை விடப் பெரிய கிறுக்கு போலும்!''



''ராகவாச்சாரியை நான் பைத்தியம் என்று சொல்ல மாட்டேன். ஆராய்ச்சிமீது அவருக்கிருந்த அபரிமிதமான ஆர்வம் காரணமாகத்தானே இரவு பகல் பாராது உழைத்தார்? அந்த நாளில் போதிய வசதி இல்லாததினால் அவர் ஆராய்ச்சி வெற்றி பெறவில்லை.''

''அதற்காக ஊரை விட்டே ஓட வேண்டுமா? ஏதோ ஒரு பரிசோதனையில் வெற்றி கிடைக்கவில்லை என்பதற்காக உடனே யாரிடமும் சொல்லாமல் தலைமறைவாவதுதான் சரியான செயலா?''

''நாலு பேர் கைகொட்டிச் சிரிப்பார்கள் என்று அஞ்சி எங்கோ ஓடிவிட்டார் மனுஷன். அவர் கொஞ்சம் 'ஸென்ஸிடிவ் டைப்.' அவர் மட்டும் ஓடாவிட்டால் சந்துரு மருத்துவக் கல்லூரி பக்கம் தலை வைத்துப் படுத்திருக்க மாட்டான். கவிதை, கதை என்று கற்பனை உலகில் சஞ்சரித்துக் கொண்டிருந்தவன் மனத்தில் ஒரு புது வெறி தோன்றியிராது. மருத்துவம் கற்று, அப்பா பாதியில் விட்டுச் சென்ற ஆராய்ச்சியை வெற்றிகரமாக முடிப்பதுதான் தன் வாழ்வின் இலட்சியம் என்று அவன் தீர்மானித்திருக்க மாட்டான்.''

''படிப்பில் கட்டியாக விளங்கி, பதக்கங்களாக வாங்கித் தள்ளியவன் ஆராய்ச்சியில் வெற்றி பெறுவான் என்று சொல்வதற்கில்லை. இதற்கு ஒரு தனித் திறமை வேண்டும்.''

''டாக்டர் ஜானகி மட்டும் இப்பொழுது இங்கிருந்தால் சந்துருவின் திறமைக்கு ஒரு கவியே பாடியிருப்பாள்! இரவு பகல் பாராது அவன் ஆராய்ச்சிக்குச் சில்லறை உதவிகள் செய்யும் அவள் என்ன நோக்கத்துடன் அவ்வாறு செய்கிறாள்?''

''காதலாக இருக்கும்.''

''ஆராய்ச்சி வெறியாக இருக்கும்.''

''கலப்படமில்லாத முட்டாள்தனமாகவும் இருக்கும்.''

சந்துருவின் வாயைத் திறந்து ஒரு 'காட்பரி' மிட்டாயை உள்ளே போட்டாள் ஜானகி.

''இது எதற்கு?''

''உங்கள் வெற்றிக்கு.''

''வெற்றியா? அது இன்னும் வெகு தூரத்திலிருக்கிறது. இப்பொழுது தான் நாம் முதல் மைல் கல்லைத் தொட்டிருக்கிறோம். அப்பா கடந்து வந்த பாதையில் கொஞ்சம் முன்னேறியிருக்கிறோம்.''

''ஆமாம், ரொம்ப நாட்களாகக் கேட்க வேண்டுமென்று நினைத்தேன். அப்பாவிற்கு இப்படி ஒரு ஆராய்ச்சி செய்ய வேண்டுமென்று ஏன் தோன்றியது?''

''பட்டாளத்தில் பணிபுரிந்த போது மனத்தில் வளர்த்துக் கொண்ட ஆசை அது.''

முதல் மகா யுத்தத்தின் போது டாக்டர் ராகவாச்சாரி ராணுவத்தில் பணியாற்றி வந்தார். திடீரென்று பல பேருக்கு Hepatic Amebiasis என்ற வியாதி தோன்றவும், அவர் கவனம் இதில் சென்றது. நோயாளிகளின் ஈரல் வெடித்துச் சளி சுவாசகோசத்திற்குள் நுழைந்து துன்புறுத்தியதை நேரில் கண்டார். சில பேர் இந்த வியாதியினால் மடிந்தனர். முக்கியமாக உயிர்த்தோழர் மேஜர் ராபின்ஸனின் அகால மரணம் அவரை ஒரு கலக்குக் கலக்கியது. அன்று அவர் ஒரு தீர்மானத்துக்கு வந்தார் — எப்படியாவது இந்த வியாதிக்கு ஒரு நல்ல மருந்து கண்டுபிடிப்பதென்று!

நீண்ட காலம் உழைத்தார். ஆஸ்பத்திரியில் ஆராய்ச்சிக்கான வசதிகள் இருக்கவில்லை. ஆதரித்து ஊக்க யாரும் இல்லை. தன் ஆர்வத்தை மட்டும் துணையாகக் கொண்டு அவர் ஆராய்ச்சியைத் தொடர்ந்து நடத்தினார். கரடு முரடான பாதையில் ஒரு முள் 'சுரீர்' என்று குத்தவும் வலி தாங்காது தலைமறைவானார்......

''இப்பொழுது எந்த அளவில் வெற்றி கிடைத்திருக்கிறது?'' என்றாள் ஜானகி.

''நான் கண்டுபிடித்த மருந்தை 'கினிபிக்கு'களுக்கும் (Guinea Pigs) முயல்களுக்கும் தந்ததில் முழு வெற்றி கிடைத்திருக்கிறது. மனிதர்கள் விஷயத்தில் இந்த மருந்து குணம் தருமா என்பதுதான் நாம் அடுத்தபடியாக ஆராய வேண்டிய விஷயம். அது அவ்வளவு சுலபமில்லை.''

''ஏன்?''

---



பீஹாரில் சுரேந்திர பிரசாத் என்பவன் தன்னுடைய மனைவி அவளுடைய வீட்டிலிருந்து கொஞ்ச நாட்களாக வராமலிருக்கவே அவளைக் கூட்டிக் கொண்டு வருவதற்கு அவளுடைய ஊருக்குப் போனார். அவள் வர மறுத்ததுடன், அவனுடைய தேகத்தில் மண்ணெண்ணெய் ஊற்றித் தீவைத்து விட்டாள். பலமான தீக்காயங்களுடன் ஆஸ்பத்திரியில் இருக்கும் அவன், தன்னுடைய மனைவி தன்னை ஒழித்துக்கட்டுவதற்காக இவ்வாறு செய்ததாக வாக்குமூலம் கொடுத்திருக்கிறான். வரதட்சிணை, மாமியார் கொடுமையால் பெண்கள் தீக்குளிப்புச் செய்திகள் அடிக்கடி கேட்கப்படும் இந்த நாளில் மறுபுறமாக இப்படி ஒரு சம்பவம்!

—ஏ. லட்சுமி ஹரிஹரன்

நன்றி: இந்தியன் எக்ஸ்பிரஸ்

வருடங்கள் போகலாம்
வயதுகளும் ஆகலாம்
ஆனால் எங்களது தேவை
விப்ரா பனியன்கள்

துள்ளிவிளையாடு ராஜா
தூயவண்ணஆடை ரோஜா,
உன் வெற்றி எங்கள் வெற்றி




தயாரிப்பவர்கள்



**விப்ரா**

ஹோசைரீஸ்
திருப்பூர்-638604



## உங்கள் அழகுக்கு அழகூட்டும் குங்குமம்

புதிய சுமங்கலி டீலக்ஸ் குங்குமம்

இன்று தன் இயற்கை எழிலை எந்த மங்கையும் மேலும் பொலிவுறச் செய்யலாம். உங்கள் ஒப்பனைக்கு மேலும் மெருகூட்டுவது சுமங்கலி குங்குமம்.

கொஞ்சம்கூட வெளியே சிந்தாத சிறந்த பாக்கிங்கில் வரும் குங்குமம் அது ஒன்றே. ஆகவே அது உங்கள் கைப்பையிலோ அல்லது டிரஸ்ஸிங் டேபிள் மேலோ வைத்துக்கொள்ள உகந்தது. சுமங்கலி உங்களுக்குப் பிடித்தமான பலவித வண்ணங்களில் கவர்ச்சியான ஜாடிகளிலும், பௌடர் உருவிலும் மற்றும் டீலக்ஸ் பர்ஸ் பாக்கிங்குகளிலும் கிடைக்கிறது.



டீலக்ஸ் ● குங்குமம்
**சுமங்கலி**
ஒரு கேசவர்த்தினி தயாரிப்பு

OBM 4952 TM

மைசூருக்கு அருகில் உள்ள தர்மஸ்தலாவில்:

சிவன் கோவில், வைஷ்ணவர் அர்ச்சகர், ஜெயின்—டிரஸ்ட்டி.

இங்கு வருடம் முழுவதும் வருவோருக்கெல்லாம் (இனாமாக) நல்ல சாப்பாடு. (ஜாதி, மத, இன வேறுபாடின்றி)

சாப்பாட்டில் முதலில் உப்பு வைக்கிறார்கள்.

சேர்ந்துதான் சாப்பிட வேண்டும்; சேர்ந்துதான் எழுந்திருக்க வேண்டும். விரும்பினால் நாமும் பரிமாறலாம்.

கண்டு, உண்டு, மகிழ்ந்து எழுதுபவர்: குண்டன்.



''மனிதர்கள் மீது பரீட்சை நடத்துவதற்கு முன் மிகமிக ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். 'ஆராய்ச்சி வெறி' காரணமாக அவசரப்பட்டு நாம் யாருக்கும் ஆபத்து விளைவிக்கக் கூடாது. மருந்தினால் எந்தவிதமான தீங்கும் நேராது என்று உறுதியாகத் தெரிந்த பின்தான் இதை மனித உடலில் ஏற்றுவேன்.''

''யதேச்சாதிகார நாடுகளில் எல்லாம் இது போன்ற புது மருந்துகளைக் கைதிகள் உடம்பில் செலுத்துவார்களில்லையா?''

''அந்த மாதிரி நாடுகளில் மனித உயிரை யார் புனிதமான ஒன்றாகக் கருதுகிறார்கள்? அது போல் துச்சமாக நாம் நடந்துகொள்ள முடியுமா? தொடர்ந்து இங்கு ஆராய்ச்சிகள் நடத்துவதுடன், என் மருந்தை அமெரிக்காவிலிருக்கும் ஒரு மருத்துவ ஆராய்ச்சி நிலையத்திற்கு அனுப்பப் போகிறேன். தனிப்பட்ட முறையில் அவர்களும் சோதித்துப் பார்க்கட்டும். என் மனத்திற்கு முழுத் திருப்தி ஏற்பட்ட பின்தான் மனித உடம்பில் செலுத்துவேன்''

டெலிபோன் அடித்தது.

ரிஸீவரை எடுத்த சந்துருவுக்குத் தூக்கி வாரிப் போட்டது. வைத்திய உலகில் தன்னை ஊக்குவித்து ஆளாக்கிய பேராசிரியர் மார்க்கபந்துவின் குரல்.

''ஒன்னுமில்லே.... எனக்குக் கொஞ்சம் உடம்பு சரியில்லே. நத்திங் டு ஒர்ரி. எனக்குத் தெரிந்த சொற்ப வைத்திய ஞானத்தைக் கொண்டு பார்த்ததில் Hepatic Amebiasis என்று படுகிறது. இந்த வியாதி வந்ததற்காக நான் வருத்தப்படவில்லே. நேர்மாறாக, மகிழ்ச்சி அடைகிறேன். ஏன் தெரியுமா? நீ கண்டுபிடித்திருக்கிற மருந்தைச்செலுத்த ஒரு உடம்பு வேண்டாமா? ஊரான் உடம்பை விட என் உடம்பை நீ உரிமையுடன் எடுத்துப் பயன் படுத்தலாமே! பிழைத்தால் வெற்றி, உன் ஆராய்ச்சிக்கு. செத்துக்கித்துப் போனாலும் பெரிய இழப்பு இல்லே. எனக்கு நிறைய வயசாயிடுத்து. அனுபவிக்க வேண்டியதெல்லாம் அனுபவிச்சாச்சு... கடைசி காலத்தில் உடம்பை மருத்துவ ஆராய்ச்சிக்குத் தந்தோம் என்ற திருப்தியாவது இருக்கட்டும்.... ஏம்பா பேச மாட்டேங்கறே?''

''ஸார், உங்க உடம்பையும் உயிரையும் நீங்க துச்சமாகக் கருதலாம் ஸார். ஆனால் நான் அப்படி நினைக்க முடியாது. வைத்தியக் கல்லூரியிலேயே என்னை மிகவும் கவர்ந்த பேராசிரியர் நீங்கதான். இன்னிக்கு இந்த ஆராய்ச்சியை நான் துணிந்து செய்யறேன்னா, அதற்குக் காரணம் நீங்க தந்த ஊக்கமும், உதவிகளுந்தான். நீங்க பிழைத்து எழுந்து செய்ய வேண்டிய வேலைகள் இன்னும் எவ்வளவோ இருக்கு. என் மருந்தை நான் உங்க உடம்பில் செலுத்தி விஷப்பரீட்சை பண்ணமாட்டேன்.''

''இதோ பார் சந்துரு. நீ மருந்தைத் தாராளமாக என் மீது பரீட்சிக்கலாம். உன் ஆராய்ச்சிக்கு ஆதியிலிருந்து யோசனைகள் சொல்லி உதவி வருகிறவன் நான். இந்த கட்டத்தில் உன் மருந்து வியாதியைக் குணப்படுத்துமே தவிர, கொல்லாது''

''நான் அவசரப்பட்டு எதுவும் செய்ய மாட்டேன் ஸார்.''

டென்னிஸ் கோர்ட் வாசலில் சந்துருவுக்காகக் காருடன் காத்து நின்றாள் ஜானகி.

''என்ன ஜான்... என்ன விசேஷம்?''

''உங்களை இக்கட்டான நிலையிலிருந்து காப்பாற்ற ஓடி வந்திருக்கிறேன்.''

''இக்கட்டான நிலையா? அப்படி எதுவும் இருப்பதாகத் தெரியவில்லையே!''

''பேராசிரியர் மார்க்கபந்து தன் உடம்பில் உங்கள் மருந்தை ஏற்றும்படி கட்டாயப் படுத்துகிறார். மதிப்பிற்குரிய ஆசான் மீது பரீட்சிக்க உங்களுக்கு விருப்பமில்லை. ஏதாவது எக்கச்சக்கமாக நேர்ந்து விட்டால் அந்தத் துன்பத்தை உங்களால் தாங்க முடியாது. வைத்திய உலகத்திற்கும் அது பெரிய இழப்பாக முடியும்.''

''பீடிகை பெரிதாக இருக்கிறதே.... விஷயத்திற்கு வா.''

''உங்கள் மருந்தை வாங்கிக் கொள்வதற்காகவே ஒரு உடல் வந்திருக்கிறது.''

''யாரைச் சொல்கிறாய் நீ?''

''அவள்... மானத்தை விற்று வாழும் பெண். உடம்பில் சொல்லக் கூசும் அநேக வியாதிகள், போதாதற்கு Hepatic Amebiasis நோய் வேறு. அவள் செத்தாலும் பெரிய நஷ்டமில்லை.''

''அதற்காக?''

''பேராசிரியர் மார்க்கபந்துவின் உடலில் மருந்தைச் செலுத்த நீங்கள் தயங்கலாம். ஆனால் இவள்? சுத்த 'வெர்மின்'.''

''டாக்டர் ஜானகி, என்னைப் பொறுத்த வரையில் எல்லா உயிரும் புனிதமானது. பேராசிரியர் மார்க்கபந்துவின் உயிருக்குத்

தரும் மதிப்பை, நோயாளி என்று என்னை அணுகும் அத்தனை உயிர்களுக்கும் தருவேன். மார்க்கபந்து அவர்களுக்காவது என் ஆராய்ச்சியைப்பற்றியும், மருந்தின் தரத்தைப் பற்றியும் நன்கு தெரியும். அவர் சம்மதத்துடன் மருந்தைச் செலுத்துவது பெரிய குற்றமாகாது. ஆனால் ஒன்றும் தெரியாத அப்பாவி நோயாளியின் உடம்பில் மருந்தைச் சோதிப்பது மிகத் தவறான செயல்.''

தூங்கிக் கொண்டிருந்த ஜானகியைத் தட்டி எழுப்பினான் சந்துரு. அவள் விழுந்தடித்துக் கொண்டு எழுந்து ஆடையைச் சரி செய்து கொண்டாள்.

''ஜான், பேராசிரியர் மார்க்கபந்துவின் உயிர் ஊசலாடுகிறது. சற்று முன் எனக்குச் சொல்லி அனுப்பினார். என் கண்டுபிடிப்பான புது மருந்தை உடம்பில் செலுத்தச் சொன்னார். அப்படிச் செய்தால் அவர் நிச்சயம் பிழைப்பாராம். நான் தயங்கினேன். அவருக்கு ஆத்திரமே வந்து விட்டது. 'நான் பிழைப்பதில் உனக்கு விருப்பமில்லையா? இல்லையென்றால் சொல்லிவிடு. நிம்மதியாகக் கண்ணை மூடிவிடுகிறேன். என்றார். நீதான் எனக்கு இப்பொழுது உதவ வேண்டும். மீண்டும் ஒரு முறை பேராசிரியரிடம் 'விஷப்பரீட்சை வேண்டாம்' என்று மன்றாடிப்பார். அவர் கேட்கவில்லையென்றால் துணிந்து மருந்தைச் செலுத்திவிடு. என் அறிவுக்கு எட்டின வரையில் மருந்தினால் எந்தவிதத் தீங்கும் நேராது....''

ஒரு மணி நேரத்திற்குப் பின் டெலிபோன் அடித்தது. தூங்காமல் படுத்திருந்த சந்துருவிடம் ஜானகி பேசினாள். 'மருந்தைச் செலுத்தி விட்டேன்; நிம்மதியாகத் தூங்குங்கள்.'

மனநோய்க்காக சிகிச்சை பெற்றுவரும் டாக்டர் ஜானகியின் டயரியிலிருந்து சில பகுதிகள்.

காலை நான்கு மணிக்கு டாக்டர் மார்க்கபந்து இறந்து விட்டார் என்று தெரிந்ததும் சந்துரு துடிதுடித்துப் போனாராம். தன் 'விஷப்பரீட்சை' தன் பேராசிரியரை அநியாயமாகக் கொன்றது என்று நம்பினவர் அப்பா போன வழியில் போய்விட்டார்... எங்கு போனார் என்ன ஆனார் என்று இதுவரையில் தகவல் இல்லை.

நான் சந்துருவிடம் பொய் சொன்னதற்காக மிகவும் வருந்துகிறேன். அன்று இரவு மன்றாடிப் பார்த்துத் தோற்றால் பேராசிரியர் மார்க்கபந்துவிற்குத் தன் மருந்தைச் செலுத்தி விடும்படி கூறினார். பயம் காரணமாக நான் மருந்தைச் செலுத்தவில்லை. செலுத்தினதாகப் பொய் சொன்னேன். மருந்தினால் மார்க்கபந்து இறந்தால் சந்துருவால் தாங்க முடியாது என்று எனக்குத் தெரியும். சந்துருவை இழக்க நான் விரும்பவில்லை.

திடீரென்று அதிகாலையில் மண்டையைப் போட்ட மார்க்கபந்துவின் மரணம் இயற்கையாக நேர்ந்தது. அவர் இன்னும் கொஞ்ச நாள் உயிருடனிருப்பார், சந்துருவிடம் பின்னர் உண்மையைச் சொல்லிவிடலாம் என்று நினைத்த என் எண்ணத்தில் அவர் மண்ணைப் போட்டு விட்டார்.

சந்துரு தலைமறைவான மறுதினம் அமெரிக்காவிலிருந்து கடிதம் வந்தது. நோயாளிகளுக்குப் புது மருந்தைச்செலுத்திப் பார்த்ததில் முழு வெற்றியாம். ஒருவேளை மார்க்கபந்துவும் பிழைத்திருப்பாரோ?

நான் அவருக்கும் சந்துருவுக்கும் தீங்கு இழைத்து விட்டதாக மனச்சாட்சி குத்திக் காட்டுகிறது. இந்தக் குழப்பத்திலிருந்து நான் எப்படி விடுபடுவேன்?

## என்ன ஸார் புதுமை? மருத்துவத் துறையில்...

சிறுநீரகங்களில் சிலருக்கு 'கல்' உருவாகிறது. காரணம்? யூரிக் ஆஸிட், கால்ஷியம், அல்லது ஆக்ஸலேட் அதிகமானால் சிறு படிகம் தோன்றி அதன் மேல் அந்த ரசாயனப் பொருள்கள் மேல்மேலும் படியப் படிய படிகம் வளர்கிறது என்கிறார்கள். இந்தக் 'கல்' சிறுநீரகத்திலிருந்து சிறுநீர்ப் பைக்கு அடித்துச் செல்லப்படுமானால் அந்தக் குழாயில் வழியில் சிக்கி அடைப்பு ஏற்படுத்தித் தாங்க முடியாத வலியும் உண்டாக்கும். வேறு இடங்களில் வளரும் சில சிறுநீர்க் 'கல்' பெரிதாவிருப்பினும் சிறுநீர் ஓட்டத்தைத் தடை செய்யாததால் வலி தெரியாது. ஆனால் நாளடைவில் சிறுநீரகம் பழுதுபடும்.

சிறுநீரகக் 'கல்'லை மருந்து கொடுத்துக் கரைக்கலாம்; தேவையானால் சஸ்திர சிகிச்சை செய்தும் நீக்கலாம். இப்போது மேற்கு ஜெர்மனியில் மின்சார (ஷாக்) அதிர்ச்சி அலைகளை அனுப்பி 'கல்'லைச் சிறு துகள்களாக உடைப்பதில் வெற்றி கண்டிருக்கிறார்கள். இவ்வாறு பொடியான 'கல்' சிறுநீருடன் எளிதாக வெளியே வந்து விடுகிறது. ஷாக் கொடுக்கும்போது வேறு எந்தப் பாகத்துக்கும் தீங்கு ஏற்படுவதில்லை.

—ஜெர்மன் டிரிப்யூன்

# அதற்கு தேவை இவைதான்: சாந்தமுள்ள மன நிம்மதி சக்தியுள்ள உணவுகள்.

ஆம், குழந்தைக்கு பாலூட்டத் தயாராகும் நீங்கள் கவனத்தில் கொள்ள வேண்டியது மிக எளிய விஷயம்; மன நிம்மதியோடு பாலூட்டுங்கள். அதிகமாக பால் சுரப்பதற்கு உதவிடும் உணவுகள் அனைத்தையும் உண்ணுங்கள்.

### கவலைப்படுவதை நிறுத்துங்கள்

கவலைப்படுவது உங்களுக்குத் தீங்கு விளைவிக்கும்—என்றால் உங்கள் குழந்தைக்கும்தான். கவலைப்படுவதால் உங்களுக்கு நோய் ஏற்பட்டு பால் வற்றிவிடும்.

நோய் பிரச்சினைகள் எதுவும் உங்களுக்கு இருந்தால், அலட்சிமாக இருந்துவிடாதீர்கள்: டாக்டரிடம் செல்லுங்கள். அவரை உங்கள் மூத்த நண்பராய்க் கருதுங்கள்.

### ஆரோக்கியமான உணவைத் துவக்குங்கள்:

உடலுக்கு உகந்த ஆரோக்கிய உணவு எது என்பதை அறிந்திட பிரமாதமாக நூல் நிலையத்திற்குச் சென்று புத்தகங்களைப் புரட்டுவதோ, கலோரி பட்டியலைப் பார்ப்பதோ அவசியமில்லை. உங்களுக்கு தேவை பொது அறிவுதான்.

உதாரணமாக, குழந்தையின் வளர்ச்சிக்கு புரதம் அதிக அளவில் தேவைப்பட்டால் அதை வழங்கக் கூடியவை, உடல் வளர்ச்சியை உருவாக்கும் பால், முட்டை, மாமிசம் ஆகும். அவற்றை நீங்கள் உண்ண வேண்டும்; புரதச் செறிந்த உணவுப் பானங்களை அருந்த வேண்டும். புரதச் சத்தை அதிக அளவில் நீங்கள் பெறுவது, உங்கள் குழந்தையும் பெறுவதாகும்—உங்களிடமிருந்து.

மிகவும் முக்கியம் என்னவென்றால் கார்போஹைட்ரேட்டுகள் அதிகம் கூடாது. காரணம் அது பாலின் தரம் மற்றும் அளவை பாதிக்கும்.

இதுபோன்ற எளிய நடவடிக்கைகள் கூட, உங்கள் குழந்தை முறையாக முழுப்பால் குடித்திட உதவிடும். உடல்நிலை மோசமாக பாதிக்கப்பட்டிருக்கும் பட்சத்தில், உங்கள் குழந்தைக்கு நீங்கள் மாற்றுப் பால் தேர்ந்தெடுக்க வேண்டும்.










## ஸ்ப்ரே ட்ரை செய்யப்பட்ட அமுல் ஸ்ப்ரே

அமுல் ஸ்ப்ரே-நன்கு சமச்சீராக கலக்கப்பட்ட சத்துக்களுடன் கூடியது—பிரதம தரமுள்ள புரதம், ஜீரணிக்க எளிதான கொழுப்பு மற்றும் கார்போஹைட்ரேட்டுகள், சரியாகக் கலந்துள்ள வைட்டமின்கள் மற்றும் தாதுக்கள்.

எற்கனவே கொதிக்க வைத்த வெது வெதுப்பான நீரில் அதைக் கலப்பது எளிது, முன்னுலேயே அதை பசை போல் தயாரிக்க வேண்டிய அவசியம் இல்லை.

## சிக்கனமானது

டின்னில் அடைக்கப்பட்டுள்ள குழந்தை உணவுகளில் மிகவும் சிக்கனமானது, அமுல் ஸ்ப்ரே. காரணம், அது இந்தியாவின் 'வெண்மைப் புரட்சிக்கு முன்னோடி'யான நவீன பால் நிறுவனத்தால் தயாரிக்கப்பட்டுள்ளது.

ஆனல் கொதிக்கவைத்த நீர், சுகாதார முறையில் கிருமி நீக்கம் செய்யப்பட்ட பாத்திரங்கள் மற்றும் பால் புட்டிகள் உபயோகித்தலை உறுதிசெய்து கொள்ளுங்கள். பால் கலக்கப்படும்போது அதிகம் நீராகிவிடுவதை தவிர்ப்பதற்கும், போதுமான ஊட்டச் சத்துக்களை உறுதி செய்வதற்கும் டின்மீது குறிப்பிட்டுள்ள வழி முறைகளை கவனமாக பின்பற்றுக.

உங்கள் குழந்தையின் ஆரோக்கிய ஆர்வத்தில் ஒரு நற்செய்தி வழங்குகின்றனர் அமுல் ஸ்ப்ரே தயாரிப்பாளர்கள்.

**இலவசம்! அமுல் வளர்ப்பு வழி—**

[illegible] குழந்தையின் வளர்ச்சி, நோய்த் தடுப்பு, [illegible] ஆங்கிலம், இந்தி, மராத்தி, குஜராத்தி, தமிழ், தெலுங்கு, மற்றும் மலையாள மொழிகளில்.

உங்கள் பெயர், மற்றும் முகவரியுடன் ரூ. 1.25 தபாலதில் வைத்து எழுதுக இம் முகவரிக்கு: தபால் பெட்டி எண் 10124, பம்பாய் 400 001.

# அமுல்ஸ்ப்ரே

இந்தியாவின் முன்னணி பால் நிறுவனத்தின் தயாரிப்பு.



குஜராத் கோ-ஆப்பரேடிவ் மில்க் மார்க்கெட்டிங் ஃபெடரேஷன் லிமிடெட், தபால் பெட்டி எண். 10, ஆனந்த் 388 001 குஜராத் மாநிலம்.




ASP/AS-4/83

## அத்தியாயம் 17

இன்னும் இரண்டு மூன்று ஆட்கள்பார்த்துவிட்டுத் தண்ணீர்த் தொட்டித் தெருவுக்குத் திரும்பியபோது பிற்பகல் மூன்று மணி.

நாணு ஐயர் அயர்ந்து போயிருந்தார்.

''இனிமே கவலையில்லே சாமி. சகியா விஷயம் முடிச்சுட்டோம். உங்களுக்குத்தான் சிரமம். நீங்க வந்ததுலதான் அதிகம் வெரட்டாம இருந்தான். வயசுக்கு நம்ம ஊர்ல தனி மதிப்பு சாமி.''

''சரிதான். ஆனா முடியலே காத்திலாய். கார்ல போயிட்டு வந்தும் கஷ்டமா இருக்கு.''

''மன்னிச்சுக்கணும். என்னாலதான் சிரமம்.''

''பரவாயில்லே. ஒரு சின்ன உதவி செய்யணுமே எனக்கு.''

''சொல்லுங்க சாமி.''

''இப்ப மேலே போய் அக்கடான்னு படுக்கத்தான் முடியும். என்னால ஓட்டல் சாப்பாட்டுக்கு ஓட முடியலே. வயிறு பிடுங்குறது.''

''என் வீட்ல சாப்டுங்க.''

''எத்தனை நாள் போடுவே?''

''புரியலையே சாமி.''

''எனக்கு ஒரு பொண்ணு இருக்கா. காயத்ரின்னு பேரு. பி. காம் பாஸ் பண்ணிட்டு சும்மா இருக்கா மன்னார்குடில. கூட ஒத்தாசைக்கு வரச் சொல்லலாமான்னு பாக்கறேன்.''

''சொல்லுங்களேன்.''

''என் சம்பளம் எனக்கே காணாது. இரண்டு பேர் சாப்டணுமே முடியுமா?''

''சாமி, டைப்பிங் தெரிஞ்சா என் கம்பெனிலயே வேலை போட்டுலாம்.''

''பேஷா செய்வோ. ஷார்ட் ஹாண்ட் டைப்பிங் அக்கௌண்டன்ஸி எல்லாம் தெரியும். ரொம்ப சூடிகை. ஆனா உனக்கு ஆள் தேவைதானா யோசனை பண்ணு.''

''நிச்சயம் தேவை சாமி.''

''பி. காம் படிச்ச பொண்ணுப்பா.''



# இரும்பு குதிரைகள்

பாலகுமாரன்

''அட இங்க வந்து இருக்கட்டும். என்னை முடிஞ்சதைத் தரேன். அப்புறம் நல்ல வேலை கெடைக்காமலா போய்டும்.''

''அப்படித் தடக்குன்னு விட்டுட்டுப் போயிடமாட்டா. உனக்குச் சிரமம் வராத படி பார்த்துக்கறேன்.''

''நானூறு ரூபா சம்பளம். சரிதானா?''

''நானூறா?''

''சரி, ஐந்நூறு. நீங்களும் இப்டிக் கூட மாட வந்திங்கன்னா சௌகரியம்.''

''ம்... அது செய்துடலாம்.''

''அப்ப நான் வரேன் ஐயர்.''

''ராஜகோபாலா,...'' நாணு ஐயர் முன் கடந்து படியேறினார்.

சௌ. காயத்ரிக்கு அநேக ஆசிர்வாதம். என்று கடிதம் எழுதினார்.

காயத்ரிக்கு அரசாங்க பஸ்ஸில் இடம் கிடைக்கவில்லை. டூரிஸ்ட் என்று போட்டுப் பளபளப்புடன் இருந்த தனியார் பஸ்ஸில் டிக்கட் வாங்கினாள். பெரிய பெட்டியும், ஸ்டவ், அரிசி, பருப்பு டப்பா மூட்டையும்,



உள்ளே வைத்தான். அந்த ஆம்னி பஸ் கடைத் தெருவில் நின்று சென்னைக்கு ஆள் அழைத்துக் கொண்டிருந்தது.

பஸ்ஸில் டேப் டெக் வைத்து பாட்டும் போட்டிருந்தார்கள். வெயில் ஆரம்பித்த ஒன்பது மணிப் பொழுதில் பஸ்ஸிலிருந்து பாட்டு அலறிற்று.

பனி விழும் மலர் வனம்
உன் பார்வை ஒரு வரம்
இனி வரும் முனிவரும்
தடுமாறும் கனி மரம்

எப்போது இந்தப் பாட்டை நிறுத்துவான்?

இவ்வளவு சத்தம் போட யார் உரிமை கொடுத்தார்கள்? நம் ஜனங்களுக்கு எல்லாமே ஏன் இரைச்சலாகவே பிடித்துப் போகிறது? கல்யாணம், சாவு, கொண்டாட்டம், பிரயாணம், ஊர்வலம் எல்லாம் ஏன் அலறுகின்றன. இவர்கள் மௌனமாய் இருக்கிற நேரம் எப்போது? தூங்கும்போது மட்டும்தானா? ஒருவேளை கனவிலேயும் சண்டையும் சத்தமுமாய் இருப்பார்களோ. சாப்பிடும்போது பல வீடுகளில் மௌனம் வீற்றிருக்கிறது. பத்துப் பேர் சாப்பிடுகிற வீட்டில்கூட மெல்லுகிற சப்தம் மட்டுமே எதிரொலிக்கிறது.

ஆனால், அப்பாவோடு சாப்பிடுகிறபோது தான் நிறையப் பேச முடியும். அம்மாவின் அதட்டலை மீறி நிறையக் கேள்வி கேட்க முடியும்.

''அப்பா, அந்தகரணம் என்றால் என்ன?''

அப்பா சாப்பிடுவதை நிறுத்திவிட்டு சாதத்தில் கைவைத்தபடி ஒரு நிமிடம் மௌனமாய்ப் பதில் தயாரித்தபடி இருப்பார்.

''அந்தகரணம்னா தன்னுள் தான் இறங்குதல். பார்வையை உள் பக்கம் புரட்டிப் பார்த்தல். தன்னை அறிதல்.''

''தன்னை அறிதல்னா என்னப்பா.''

''எப்டிம்மா இதுக்குப் பதிலாச் சொல்றது. வெளிப்புறத் தாக்குதலுக்குச் சிதிலமாகாமல் தனக்குள்ள நடக்கிறதை உணர்ந்து பார்க்கறது. வெளிப்புறத் தாக்கத்தையும் வாங்கி ரிஜிஸ்டர் பண்ணிக்கிறது. குளத்துக்கு மேலதான் அலை. உள்ளே நிச்சலனம். மேல இருக்கிற அலையும் குளம் செய்த காரியமில்லை. அலையும் இருந்து அலையால் தன்மை பாதிக்கப்படாமல் இருக்கும் நிலை. புரியறதா''?

எனக்குள் என்ன நடக்கிறது. நான் யோசிக்கிறேன். இடையறாது யோசிக்கிறேன். வெளிப்புறத் தாக்கத்தில் யோசிப்பு இழை அறுந்துபோக எரிச்சலுறுகிறேன். மறுபடி இழையைத் தேடி யோசிக்கிறேன்.

இரைச்சலாய்ப் பாட்டு காதில் மோதும் போது கோபம் வருகிறது. அந்தக் கோபம் பாட்டை கேவலம் என்று நினைக்க வைத்து விடுகிறது. இந்தக் கோபம் கூடாது. என் கோபத்தை எதிர்ப்படும் விஷயத்தின் மீது போட்டு மிதித்துவிடக் கூடாது.

பாட்டு என்றதும் 'ஒரு பெண்ணின் டயரியில் எழுதி வைக்கப்பட்டிருந்த கவிதைகள் நினைவு வந்தன.

''அவ சேப்பா இருக்காடி. அவ சேப்புக்கே சட்டுன்னு கல்யாணம் நடந்துடும்.'' அக்கா அந்தப் பெண்ணைக் கைகாட்ட ஒரு நாள் முழுவதும் மனசு கலங்கித் தவித்தது.

அக்கா அந்தச் சிவப்புப் பெண்ணை அறிமுகப்படுத்தினாள். அவள் வீட்டுக்குக் கூட்டிப் போனாள். அந்தப் பெண் டைரி எழுதுவாளாம். அவளுடைய டைரியை அவளுடைய நெருங்கிய ஸ்நேகிதிகள் படித்துவிட்டுப் பரவசப் பட்டிருக்கிறார்களாம்.

''நீ படிக்கிறியா?'' - அந்தப் பெண் தன் டைரியை நீட்டினாள்.

''உன் டைரியை நான் எப்படிப் படிக்கலாம், தப்பில்லையா?''

''அசிங்கமா எதுவும் இருக்காது. படிக்கலாம்.'' அந்தப் பெண் உத்தரவாதம் சொன்னாள்.

''அதற்கில்லை. டைரிங்கறது அந்தரங்கம் இல்லையா?''

''நம்ம எல்லாருக்கும் ஒரே மாதிரி அந்தரங்கம்தானே படிச்சா என்ன?''

பதிலில் தெரிந்த கெட்டிக்காரத்தனம் யோசிக்க வைக்க, டைரியை அவள் எதிரிலேயே பிரித்தாள்.

முதல் பக்கம் கலர் பென்சிலில் கோடுகட்டிக் கட்டம் போட்டு ஒரு கவிதை.

என் விழிகள் நட்சத்திரங்களோடு
உறவாடினாலும்
என் விரல்கள் என்னவோ ஜன்னல்
கம்பிகளோடுதான்

கீழே அந்தப் பெண்ணின் பெயர் எழுதியிருந்தது.

''இது நீ எழுதியதா?''

''இல்லை. மு. மேத்தா.''

''உம் பேர் போட்டிருக்கே.''

''எனக்கு இந்தக் கவிதை பொருத்தமா இருக்கு. அதனால போட்டுண்டேன்.''

''ஏன் நீ ஜன்னல் கம்பிய விட்டு வரதேயில்லையா?''

''என்ன கேக்கறே?''

''நீ சந்தோஷமா இல்லையான்னு கேக்கறேன்.''



''எப்படிச் சந்தோஷமா இருக்க முடியும்? ஆயிரம் கட்டுப்பாடு... இங்க போகாத... அங்க போகாதன்னு.''

''யார் கட்டுப்படுத்தறா?''

''பெத்தவா, கூடப் பொறந்தவா எல்லாரும்தான்.''

''என்னா யோசிச்சையா?''

''நான் பொண்ணாப் பொறந்த வேளை.''

''நோ'' — காயத்ரி சீறினாள். ''உன்னை ரொம்ப டெக்கரேட் பண்ணிக்கிறே. பொண்ணாப் பொறந்ததுக்கு ரொம்ப சந்தோஷப்படற. இன்னும் நெறையப் பொம்மனாட்டித் தனம் வேணும்னு ஆசைப்படற. உனக்கு நன்னா உடுத்திக்கத்தான் தெரியும். உலகம் தெரியாதுன்னு உன் கூட இருக்கிறவாளை நெனைக்க வைக்கிற.''

''இந்த டைரிய படிச்சுட்டு எல்லாரும் ஓஹோன்னு பாராட்டினா... நீதான் என்னென்னமோ சொல்ற.''

அந்த டைரியைப் முழுவதும் கவிதைகள், காதல் செய்திகள், சோகமயமான வேதனைகள். யார் யாரோ எழுதிய வரிகள். ஒவ்வொரு வரிகளுக்கும் கீழே தன் பெயரை எழுதி வைத்திருந்தாள். பூவைப் பிய்த்துச் சூடிக் கொள்கிற சுலபமாய் யார் வரியையோ எடுத்துத் தன் டைரியில் தன் பெயரைப் போட்டுக் கொண்டிருக்கிறாள்.

காயத்ரி மௌனமாய் அவளை ஏறிட்டுப் பார்த்தாள். தேவையின்றி இவளிடம் நான் சீறுகிறேனா. கேள்வி கேட்காமல் பல தலைமுறைகள் தாண்டியாயிற்று. இவளை உலுக்கி என்ன பயன்? எனக்கே எது குறித்தும் தெளிவில்லை. இவளை அதட்டுவது அனாவசியம். கவிதை பற்றிப் பேசுகிறாளே விவாதத்துக்கு வருவாள் என்று பார்த்தால் துவஜஸ்தம்பமாய் நிற்கிறது. பேயாய் முழிக்கிறது.

ஆனால் சோகம் சுகமானது என்று வலிய சோகமாக பாவனை செய்து கொள்வது எத்தனை அபத்தம். ஆனால் இங்கே சோகம் எல்லாருக்கும் பிடிக்கிறதென்று சோகம் விற்கிறார்கள். எது விலை போகும் என்று தெரிந்து அதையே கலையாக்குகிறார்கள்.

சோகம் மட்டுமில்லை. காதல் வர்ணனைக்கும் நல்ல விற்பனை.

ஆண்களை மயக்கக் காதல் வர்ணனை. பெண்களை மயக்கச் சோகம் ததும்பும் காட்சிகள். இதில் எதுவும் சிக்காமல் மீண்டு வருவது நிறைய பேருக்கு சிரமம் தான்.

பஸ் கிளம்பியதும் பாட்டு நின்று விட்டது. ரூம் ரூம் என்ற டயர் சத்தம். டீசல் நெடி. என்ஜின் சூடு. எதிர்ப்படும் காற்று. பறக்கும் மரங்கள், மலைகள், மலைச்சரிவில் மந்தையாய் மேயும் ஆடுகள். நடுவே உயரப் பாறையில் துறட்டிக் கோலுடன் கோவணத்துடன் ஒரு சின்னப் பையன். 'அடே சின்னப்பையா, இத்தனூண்டு வயசில இவ்வளவு பெரிய பொறுப்பை எப்படி ஏற்றாய். அத்தனை ஆடுகளையும் அடையாளம் தெரியுமா உனக்கு. உன் பேச்சு அதற்குப் புரியுமா? ஆடு பேசினால் நீ புரிந்து கொள்வாயா? வெட்ட வெளியில் தன்னந்தனியாய்...யார் உனக்குச் சாப்பாடு எடுத்து வருவார்கள். குடிக்க ஜலம் எங்கே வைத்திருக்கிறாய். மலை முழுக்க ஆடுகளுக்குச் சாப்பிடத் தாவரம் இருக்கிறது. உனக்கு... சாப்பாடு எடுத்து வந்திருக்கிறாயா?

'அடேய் சின்னப் பையா... உன்னை நான் நேசிக்கிறேன். இந்த பஸ்ஸிலிருந்து உனக்கு முத்தம் அனுப்புகிறேன். உன்னை யாரும் கவிதையாக்கி இருக்கிறார்களா?'

காயத்ரிக்கு ஆடு மேய்க்கும் ஆசை வந்தது.

என் மனவெளியில் ஆயிரம்
மரபு ஆடுகள்.
அறிவென்னும் துறட்டுக்கோலும்
அப்பா என்கிற கோவணமும்
தரித்து நிற்கிறேன்.
வேறு வழியில்லை;
நான் மேய்ப்பாளுகத்தான் வேண்டும்.

ஆ... எனக்கும் கவிதை எழுத வருகிறதே! கவிதை தானா இது? அப்பாவைக் கேட்க வேண்டும்.

ஹைகோர்ட்டுக்குப் பின்புறம் உள்ள பஸ் ஸ்டாண்ட் வாசலில் துள்ளி இறங்கிய காயத்ரியை நாணு ஐயர் காத்திருந்து வரவேற்றார். தன்னை நெருங்கிய மகளின் தலையைக் கோதி நெற்றியில் முத்தமிட்டார். ஒரு மாளிகையின் பெருங்கதவுகள் திறந்ததென பரபரப்பான சென்னை நகரம் காயத்ரியை வரவேற்றது. (தொடரும்)




**விடுமுறை! விடுமுறை!**

முன்பு 'எக்ஸ்பிரஸ் டெலிவரி' என்றால் ஞாயிற்றுக் கிழமைகளில் கூட தபால் பட்டுவாடா ஆகும். இப்போதோ, எல்லா அரசு விடுமுறை நாட்களிலும் தபால் டெலிவரியே கிடையாதாம். இதே விதமாகப் போய்க் கொண்டிருந்தால்...

ஞாயிற்றுக் கிழமைகளில் ரயில் ஓடாது; டெலிபோன் ஒர்க் பண்ணாது; டி. வி, ரேடியோ நிகழ்ச்சிகள் இராது; மின் சப்ளை இராது...

நல்ல காலம்... சாராயக் கடையும் சினிமாக் கொட்டகையும் மட்டும் திறந்திருக்கும்... பொதுஜன சேவை!

'மில்க்'

# தாய் வீடு



இரண்டு தங்க வாள்கள். ஒன்று மியூஸியத்தில். மற்றொன்று மேஜரிடத்தில். இரண்டையும் சேர்த்தால் ஒரு புதையல் ரகசியம் என்கிற காமிக்ஸ் கதைதான் பின்னணி!

வாளைத் திருட வந்து கிடைக்காமல் பிள்ளையைத் திருடிப் போகிற வில்லனும் தேங்காய் (தமிழ்நாட்டில் தண்ணீருக்கு அடுத்தபடி ஒரு பயங்கர பஞ்சம்; வில்லன் நடிகர்கள்). அவரிடமிருந்து காரோடு குழந்தையையும் திருடுகிற நம்பியார். நம்பியாரிடம் வளர்ந்து அவர் குலத்தொழிலில் சிறக்கிற ரஜினி. போதாதகதற்குக் குதிரைமேல் ஜெய்சங்கர் (போலீஸ் ஆபீஸராம்! ஒரு முறையாவது யூனிஃபார்மில் காட்டியிருந்தால் திருப்தியாயிருந்திருக்கும்.) பின்னும் விஜயகுமார். சண்டைக்கு இனி பஞ்சமில்லை.

கிளுகிளுப்பிற்கு...?

ஹோட்டலில் ஆடுகிற அனிதாராஜின் மேல் ரஜினிக்குக் கண் விழுந்து அவரை வசப்படுத்துகிற முயற்சிகள். குறிப்பாய் நீச்சல் சொல்லித் தருகிற இடம். (அரசு கேள்வி – பதிலில் சீக்கிரமே ஒரு சமாசாரம் அடிபடப் போகிறது: அனிதாராஜின் மூக்கு. அவ்வளவு செழிப்பு!)

தாய்க்குலத்திற்கு...?

பிள்ளைப் பாசத்தில் பைத்தியம் பிடித்த பண்டரிபாய். அண்ணன் பாசத்தில் பாட்டு பாடுகிற சுஹாசினி. இவர்களுக்கிடையில் வந்து சிக்குகிற ரஜினி.

கவர்ச்சிக்கு...?

ஜெயமாய் சிலுக்கு. போதும் போதாததற்கு அருணா இரானி வேறு வடக்கிலிருந்து இறக்குமதி.

தேவரின் பெயரைச் சொல்வதற்கு...?

ரஜினி தன் நாயிடம் தங்கவாளைக் கொடுத்து அனுப்ப, அதைக் கவர்ந்து வர ஜெய் தன் குதிரையைப் பின்னால் அனுப்பி வைக்க, இரண்டும் மாற்றி மாற்றி ஒன்றை ஒன்று ஏமாற்றிக் கொள்கிற இடமும், கடைசிச் சண்டைக் காட்சிகளில் அவை செய்கிற ஆட்டியும்....

தேவர் பிலிம்ஸ் மசாலா தயார். வந்து உட்காருங்கள் என்கிறார் டைரக்டர். கார் திருடனை 24 மணி நேரத்தில் பிடிக்கிறேன் என்று சவால் விட்ட போலீஸ் கமிஷனரின் காரையே ரஜினிகாந்த் கிளப்பிக் கொண்டு வருகிற சுறுசுறுப்பு நம்மை உட்கார்த்தி வைக்கிறது.

திருடப்போன இடத்தில் பாசத்தை மடி நிறைய வாங்கிக் கொண்டு மேஜர்தான் உண்மையான தந்தை என்று புரிந்தவுடன் வில்லன்களைத் தீர்த்துக்கட்ட ரஜினி புறப்படுகிற வரை ஊர்வலத்தில் சிக்கிய வண்டி மாதிரி கதை மெதுவாய் ஊர்கிறது. அப்புறம் ஜல்லிக்கட்டுக் காளைப் பாய்ச்சல்!

காதைக் கிழிக்கிற வேலை சங்கர் –கணேஷுக்கு. தாராளமாய்ச் செய்திருக்கிறார்கள்.

மூளையைக் கழற்றி முழங்காலுக்கிடையில் வைத்துக் கொள்ளத் தயாராயிருந்தால் மூன்று மணி நேரம் முரண்டு பிடிக்காமல் நிமிஷமாய்ப் பறந்து போகும்.

---



அவன்: ''என்னடா... எதையோ நினைச்சு நீயே சிரிக்கக்கிறே?''

இவன்: ''இந்த மாசம் ஏதாவது குளம் குட்டையிலே எனக்கு ஒரு 'கண்டம்' இருக்குன்னு ஜோஸ்யர் சொன்னதை நினைச்சேன்!''

-எஸ். வேங்கடராமன்

# சாட்டையில்லாத பம்பரம்

ஒரு சின்னக் குடுவையை எடுத்துக் கொள்ளுங்கள். பதினாறு வயதினிலே கமல், கல்யாணராமன் கமல், மூன்றாம் பிறை ஸ்ரீதேவி என்று ஒவ்வொரு மிக்ஸ் விட்டுக் குலுக்குங்கள். கிடைக்கிற அசட்டு திரவம் சாட்டை இல்லாத பம்பரம் சிவகுமார்.

இன்னொரு குடுவையை எடுத்துக்கொள்ளுங்கள். நூல்வேலி சரிதா, தண்ணீர் தண்ணீர் சரிதா, அக்னிசாட்சி சரிதா என்று எத்தனை வேண்டுமானாலும் போட்டுக் குலுக்கிமொத்தமாய்க் குப்பைத் தொட்டியில் சரித்து விடுங்கள். குடுவையில் ஒட்டிக் கொண்டு மிச்சமிருக்கிற துளிகள் சா. இ. பம்பரம் சரிதா.

இந்த இரண்டு பேரை நம்பி பாக்யராஜ் எழுதிக் கொடுத்த கதை.

பத்து ரூபாய்க்கு இரண்டு கடலை உருண்டைகளைப் பெரிய மனத்துடன் விற்று விட்டு 'விவரம் தெரிஞ்ச பொண்ணாப் பாத்துக் கட்டிக்க' என்று காந்திமதி சொல்ல, அந்த 'விவரம் தெரிஞ்ச பொண்ணைத்' தேடி டெஸ்ட் வைத்து சிவகுமார், சரிதாவிடம் தாராளமாய் வாங்கிக் கட்டிக் கொள்கிற இடங்களில் கொஞ்சம் சுறுசுறுப்பு. வண்டியிழுக்கிற சிவகுமாரும், மண் சுமக்கிற சரிதாவும் சந்தித்த 'விபத்தில்' மௌனம் சாதித்திருக்கக் கூடிய ஒரு பாதிப்பை வளவள கண்ணீர் வசனம் காற்றிறக்கி விடுகிறது.

பணக்கார அப்பாவாய் சோ. ஆஸ்பத்திரியாகட்டும், அடுப்பங்கரையாகட்டும், சோ வாயைத் திறந்தால் ஆளுங்கட்சி, எதிர்க்கட்சி, அம்மா கட்சி என்று அரசியல் குப்பென்று நெடிவீசுகிறது. மாப்பிள்ளை சிவகுமாரை, மணமகள் சரிதாவிடம் கொண்டு சேர்க்க சங்கிலி முருகன் [illegible] போடுகிற திட்டங்கள் எல்லாம் [illegible] தவிடுபொடியாகிற நேரத்தில், ஒரு சின்ன கலாட்டா செய்து சங்கிலி முருகன் போலீஸை வரவழைக்க, அவர்களையும் போலி போலீஸாகக் கருதி சோ சோடா பாட்டில் வீசிச் சிக்கல் செய்கிற இடத்தில் சிரிப்பலைகள்.

நாலு குடித்தனங்களுக்கிடையில் [illegible] கடமை நிறைவேற்ற சிவகுமார் தவிக்கிற காட்சி. ஒஹோ ஒருவேளை இது பாக்யராஜ் கதைதானோ என்று நினைக்க வைத்தாலும் ஐடியா பழசு.

வாலியின் வசனங்கள் நறுக். சிவகுமார் அலட்டிக் கொள்ளாமல் நடித்திருக்கிறார். சரிதாவுக்கும் டைரக்டருக்கும் ஒத்துப் போகவில்லை என்று இங்கிங்கே சில பத்திரிகைகளில் வெளிவந்தது உண்மையாகத்தான் இருக்கும் போலிருக்கிறது. மாக்ஸியும், சுடிதாரும் சரிதாவை அணிய வைத்து' அத்துடன் ஒரு கனவுப் பாடலில் ஆட வைத்து - நன்றாகவே பழி வாங்கி இருக்கிறார் டைரக்டர்.

டைட்டில்ஸ் போடுகிற காட்சியில் இரவல் வாங்கிச் சேர்த்திருக்கிற ஆங்கில தண்ணீர் ஜாலங்கள் அற்புதமான சுகம்.

திடீரென்று சோவின் நண்பர் சாமிக் கண்ணு வில்லனாகிறார். சோவைக் கட்டுகிறார். சிவகுமாரைக் கட்டுகிறார். சரிதாவைக் கட்டுகிறார். என்ன ஒரு அற்புதமான திருப்பம்!

எங்கேயோ ஆரம்பித்துக் கால் இடறின திக்கெல்லாம் போய் ஒரு வழியாய்ப் படம் முடிகிற போது.... அப்பாடா! மொட்டை பம்பரம்!

-ஜெய மன்மதன்



# 'கருப்பையா, இனி பள்ளிக்கூடம் போகக்கூடாது!'

சூளாமணி நல்ல சூட்டில் இருந்தாள்.

''மாப்ள ஊட்டுக்காரவுக வாரப் போற நேரத்துல - இப்படி ஊடு குப்பையும் கூளமுமாக் கெடந்தா இந்தச் சம்பந்தமும் உருப்பட்ட மாதிரிதான். அடியே மகேசுவரி மொத தரையைக் கூட்டிச் சுத்தப்படுத்து புள்ளே...!'' வாய் பாட்டுக்குப் பதறிக் கொண்டிருந்தது.

கால்கள் வீட்டைப் பதற்றத்துடன் சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருந்தன. அந்த நேரம் பார்த்து வந்த மாதையன் வேறு சூளாமணியிடம் வந்து காதைக் கடித்தான்.

''அக்கோவ்.... இந்தச் சம்பந்தத்தைப் பெரும் பாடுபட்டுப் பிடிச்சிருக்கேன். இதையும் விட்டா உன் பொண்ணுக்கு விமோசனம் இனி அடுத்த பொறப்புலதான். வாரவுக சீர் செனத்தின்னு ஏதும் பேச மாட்டாங்க. பேசினாலும் கவலைப்படாதே. மாப்ளே பெரிய மொதலாளி மனுஷன்! தெரியுமா?''

அதுகேட்ட சூளாமணியின் முகத்தில் விநாடியில் கவலை ரேகைகள் வந்து பரவின. அதைப்பார்த்த மாதைய்யனுக்குஉதைத்தது.

''த...பாத்தியா... உடனே யோசிக்கிறையே. சீரும் செய்யாமல், காசும் தராமல் கல்யாணம் கட்டணும்னு நெனைச்சின்னு ஒனக்கு ஒரு கபோதிப் பயகூட மாப்பிள்ளையா வரமாட்டான். உன் கையில காசு பணத்தை வெச்சுக்கிட்டு நீ இல்லேங்கலே. அது எனக்குத் தெரியும். ஆனா வரவுகளுக்கு அது தெரிய நாயமில்ல! தெரிஞ்சாலும் 'சரி சரி போவட்டும். பொண்ணும் குணமும்தான் முக்கியம்'ன்னு நெனைக்க அவுக தேவ மனுஷர்கிடையாது. வசதியான ஊடாப் பார்த்து ஓடிப்போவாக. பொண்ணைப் பெத்த நாமதான் நெளிவு சுளிவோட எத்த இறக்கமா நடந்துக்கணும்.' கவனத்துல வெச்சுப் பேச. வரேன்....''



மாதையய்ன் அகன்றன். இதுபோல் அவன் அகலுவது இருபதாவது முறையோ முப்பதாவது முறையோ....!

''உடன் பிறந்தவளின் பெண்ணுக்காக அவனால் மாப்பிள்ளை தான் பார்க்க முடிந்து வருகிறதே தவிர, மனிதர்களைப் பார்த்து அழைத்து வர முடியவில்லை. அப்படி யாரும் இல்லை என்பதும் கூட அவனது இறுதி அபிப்பிராயம்!

மாதைய்யனுக்கு நாற்பதைத் தாண்டி விட்டது வயது.

ஒரு கால் தான் விளங்கும். மறுகாலில் சிறுவயதில் வயலில் டிராக்டர் ஏறிவிட்டது. மறுகால் பருத்த கருவேலந் தடிதான். யாராவது 'உக்க உக்க' கொட்டிப் பரிதாபித்தால் அந்தக்கருவேலந்தடியாலேயே அடிக்க வருவான்.

—தன்மானத்தோடுபேசிவிட்டுஎண்ணெய்ச் செக்கை ஓட்டுவான். கொஞ்ச நாளாய் அதுதான் அவன் தொழில்.

''மாதைய்யா! மாப்ளே பார்த்து என்னால மாளலேடா. பாவிப் பெண்ணை எப்பப் பெத் தேனோ அப்ப இருந்தே எனக்குத் சோதனை தான். இவ பொறந்தப்ப தான் உன் காலும் துண்டாச்சு. பாவிமக! இவ வளர வளர துயர மும்ல கூடவே வளருது. பேசாம இவளை நீயே கட்டுடா. பிரம்மச்சாரியா வாழ்ந்து என்னத்த கண்டே. ஊர்க்காரங்க பார்வைக் கும், கேள்விக்கும் பதில் சொல்ல என்னால முடியல...''

—ஒருநாள் சூளாமணிதுண்டாய்த்துவண்டு விழுந்து பேசிய போது மாதைய்யனுக்கு விதிர்த்தது. பக்கத்தில் சிலையாகச் சமைந் திருந்தாள் கற்பகம்!

'பேருக்குப் பொருத்தமான கற்பகமான தேகம், வண்ணம், விழி, கேசம், அறிவு, ஆரோக்யம்.'— அத்தனையினூடேயும் அவளைப் பார்த்த மாதைய்யனுக்குத் துவட்டியது. தன்னையும் ஒருமுறை பார்த்துக் கொண்டான்.

'இந்த வண்ணப் பொண்ணுக்கு இந்தப் பானியா?' — மனத்துக்குள் கேட்டு மடிமடி யென்று மடிந்து புலம்பி விட்டுப் பேசினான்.

''யக்கோவ்...இனி இதுமாதிரி பேசாதே. பாவம் கற்பகம்! அது என்ன பண்ணும்? பூமாலைக்கா அது. கொரங்கு நான். இப்படி மோசமா கற்பனை பண்ணாதே. அதுக்கும் மனசு உண்டு. இந்த நாட்டுல நல்ல மனுஷங் களும் உண்டு. கவலைப்படாதே. நான் தேடிப் பிடிச்சு இழுத்துக்கிட்டு வந்து கற்பகம் கழுத் துலே தாலியை ஏத்தறேன். ஏதோ —... இந்த மாமனால முடிஞ்சது இதுதான்...''

—கேலி வெடித்து அது மாதிரி அவன் பேசி யதை — என்றைக்குமே எவருமே பார்த்த தில்லை. இப்பொழுது அவனைப் போல் மன முருகிப் போய், ஈரம் நீர்த்துப் போய்த் திரிப வரும் எவரும் கிடையாது!

காரணம் அத்தனை வதை!

**மா**லை மணி ஐந்து இருக்கும்.

தீப்பெட்டி தொழிற்சாலை பஸ் கூட வந்து விட்டது. பஸ்ஸிலிருந்து நண்டும் சுண்டுமாய்ப் பிள்ளைகள் தூக்குவாளி சகிதம் இறங்கி வீட்டைப் பார்க்க ஓடின.

சூளாமணி 'சிவகாசி பஸ்தானே?' என்று சப்தம் கேட்டு ஆவலாய் வாசலுக்கு வந்தாள்.

''என்ன இந்த மாப்ளே ஊட்டவுளை இன்னும் காணோம்?'' — மனத்தில் வினா.

மாதைய்யன் திண்ணையிலேயே உட்கார்ந் திருந்தான்.

''வருவாங்கக்கா. பதறாதே. மாப்ள தீப் பெட்டி தொழிற்சாலை மொதலாளி. சோலி தான் அவருக்கு மொத. அதான் சோலி முடிச்சுப் போட்டு வருவாரு. கற்பகத்தை நல்லா சிங்காரிச்சிட்டீங்களா?''

''உம்'' கொட்டிய சூளாமணி ''ஏன்டா மொதலாளி, தீப்பெட்டி தொழிற்சாலைன்னு வவுத்துல புளியைக் கரைக்கறியே. இந்தச் சம்பந்தம் கைகூடுமாடா? பெட்டிக் கடைக் காரன் கூட அஞ்சு பவுனு போடுவியான்னு கேட்டது மறந்து போச்சாடா உனக்கு...?''

—மாதைய்யன் சூளாமணியை முறைத் தான்.

''அக்கா நீ கம்முன்னு உள்ளே போ... அவுக எதுக்க வாயைத் திறக்காதே. எனக்கு எல்லாந் தெரியும். ஆமா எங்க கருப் பைய்யா?''

''பள்ளிக்கூடம் போனவன் இன்னும் வரலேடா...''

''பள்ளிக்கூடம் போய்ப் படிக்கற யோக்கி யதை நமக்கேதுக்கா? அதெல்லாம் மேட்டுக்



## 25,000 பழமொழிகள்!

பழமொழிகளையும் நாட்டுப் பாடல்களையும் சேர்க் கத் தொடங்கினார் ஒருவர். விளையாட்டுப் போல் நாற்பது ஆண்டுகள் ஓடிப் போயின.

25,000 பழமொழிகளையும், 8000 நாட்டுப் பாடல்களையும் தனி ஒருவராகவே சேகரித்து வைத்துக் கொண்டிருக்கிறார். இவற்றைப் புத்தகமாகப் போட யாருக்குக் கொடுத்து வைத்திருக்கிறதோ.

இந்த அசுர சாதனை நிகழ்த்தியுள்ளவர் கி. வா. ஜ. அவர்கள்தான்.

ஒரு கொசுறுச் செய்தி. தமிழ்த் தாத்தா எழுதிய 'என் சரித்திரம்' நூலைத் தொடர்ந்து 'என் ஆசிரியப் பிரான்' என்னும் தலைப்பில் ஐயர் அவர்களின் வாழ்க்கை வரலாற்றை எழுதி முடித்து விட்டார் கி.வா.ஜ. நூல் அச்சாகிக் கொண்டிருக்கிறது. —'சுப்ர பாலன்

குடிக்காரன் செயல். நீ அவனைத் தீப்பெட்டி தொழிற்சாலைக்கு அனுப்பு...''

''டேய் என்னடா இது... நான் வேலைக்கு ஒருநாள் போகச் சொன்னப்ப நீ தான்டா அவனுக்கும் வெணங்கட்டும். பள்ளிக்கூடம் அனுப்புன்னது. இப்ப இப்படி மாறிப் பேசு றியே... என்னாச்சு உனக்கு?''

''அக்கா அப்ப சொன்னதை விடு... இனி அவன் பள்ளிக்கூடம் போகக் கூடாது. போயி என்ன பிரயோஜனம்? தொழிலு ஒண்ணைக் கத்துக்கிட்டா காலத்துக்கும் கவலையில்லே. நானும் செக்கு ஓட்றதை விட்டுப்போட்டுத் தீப்பெட்டித் தொழிற்சாலைக்கே வேலைக்குப் போவப் போறேன்...'' என்றான்.

சிவகாசி பஸ் காற்றைச் சீவிக் கொண்டு வந்து நின்றது. மாப்பிள்ளை வீட்டார் இறங்கு வதுதெரிந்தது. மாதையன் பரபரப்பானான். சூளாமணி வீட்டுக்குள் ஓடினாள். அடுப்பில் காப்பிப் பானை ஏறியது. அக்கம் பக்கத்து பெண்டுகளில் சிலர் ஒத்தாசைக்கு ஓடிவர வீடே அமளியில் சூழ்ந்தது.

''வாங்க தொரை... வாங்கம்மா.... வாங்கய்யா....''

—மாதையன் மத்தாப்பாய் மலர்ந்து அனைவரையும் வாய் நிறைய உள்ளுக்கு அழைத்தான்.

கற்பகத்தை இழுத்து வைத்து மாப்பிள்ளை முன் நிறுத்திய போது மாப்பிள்ளை நெஞ்சை நிமிர்த்தினான். அப்பனிடம் ''அப்பா பொண்ணை ரொம்பப் பிடிச்சிருக்கு...''— என்றான்.

அப்பொழுது கருப்பையா பக்கமாய் நின்று கொண்டிருந்தான். அப்பொழுதுதான் பள்ளிக்கூடத்திலிருந்து திரும்பியிருந்தவனை மாதையன் கவனம் பிசகாமல் சுட்டிக் காட்டினான்! மாப்பிள்ளை குட்டி மீசையை நீவிக் கொண்டே சந்தோஷமானான்.

சூளாமணி தன்னால் இவ்வளவுதான் முடியும் என்று சொல்ல வாயெடுத்தபோது பையனின் தகப்பன் இடைவெட்டினார்.

''இது ஏழைப்பட்ட குடும்பம்னு தெரியும். அதனாலே பரவாயில்லை. மாதையன் அம்புட்டு வெவரத்தையும் சொல்லியிருக்குது. ஆகையால சீர் செனத்தி பத்தி பேச வேணும். அதுக்குத்தான் மாதையன் பொறுப்பேத்துக் கிச்சே... பொண்ணு எங்களுக்குப் பிடிச்சிருக்கு. கல்யாண நாள் தான் குறிக்கணும். இப்போதைக்கு வெத்தல பாக்கை மாத்தி அச்சாரம் முடிப்போம். பொறவு கல்யாண நாளைப் பத்திப் பேசுவோம்.''

—சூளாமணிக்கு உடம்பில் பரவசம் பரவியது. கண்களில் ஆனந்தக் கண்ணீர் அலை யடித்தது.

கல்யாணம் முடிந்து விட்டது.

எதிர்பார்த்ததற்கு ஒருபடி மேலேயே தடபுடலாக...

அனைவரும் சிவகாசி பஸ்ஸில் ஏறினர். மாதையன் கருப்பையாவின் கையைக் கட்டி இழுத்துக் கொண்டு புதிய எட்டு முழ வேட்டி சரசரக்க பஸ் ஏறினான்.

சூளாமணி பேசினாள்.




சிங்கப்பூரில் உள்ள ஒரு சிற்றுண்டிக் கடைக்கு வந்த சுகாதார அதிகாரிகள் சில தினங்களுக்குக் கடையின் லைசென்ஸை ரத்துச் செய்துவிட்டுப் போய்விட்டார்கள். காரணம், கடைச் சொந்தக்காரர் தம் கை விரல் நகங்களை வெட்டாமல் வளர விட்டிருந்தது தான்!

—ஏ. கே. நாசர்

''மாதையா! நான் நாள பஸ்ல முடிஞ்சா வாரேன். கருப்பையா பத்ரம். கற்பகத்தையும், மாப்ளையையும் அவங்க ஊட்ல முறையா அமர்த்திப் போட்டுவிட்டு நாளைக்கே வந்துடுங்க. வீணா மாப்பிள்ளை ஊட்டவுகளுக்கு சிரமம் தர வேணும். கருப்பையாவுக்கு இரண்டு நாளிலே பரீட்சை!''

''அக்கா கருப்பையாவை இனி மறந்துடு. என்னையும் தான். நாங்க மாப்பிள்ளையோட தீப்பெட்டித் தொழிற்சாலையில சோலி பார்க்கப் போறோம். கருப்பையா அவன் வயசுப் பிள்ளைகளோட கூடி கட்டை அடுக்கு வான். நான் பெட்டிகளுக்கு லேபிளு ஒட்டு வேன். திரும்ப மாட்டோம்கா...''

''ஏலே என்னடா சொல்லுறே... அவனை அரும்பாடுபட்டு நான் படிக்க வைக்கி றேண்டா... உனக்கேன்டா துயரம்?''

''அக்கா புரியாமப் பேசாதே. பொட்டிக் கடைக்காரன் கூட அஞ்சு பவுனு கேட்கற இந்த நாள்ள ஒரு தீப்பெட்டி தொழிற்சாலை மொதலாளி நம்ம கற்பகத்தை ஏதும் வாங்காம கட்டுனார்னு அதுக்கு காரணம் மனுஷத் தன்மை இல்லேக்கா. நானும் கருப்பையாவும் அவர் தொழிற்சாலையிலே சோத்துக்கும் தினப்படிக்கும் மாத்திரம் சம்பளமில்லாம வேலை பார்க்கிறதா ஒத்துக்கிட்டதனலத்தான் இந்தக் கல்யாணமே நடந்துச்சு. இல்லேன்னு உன் பொண்ணு பொண்ணா இருக்க முடியாதுக்கா. அது எந்த கிணத்துலேயாச்சும் விழுந்து இந்நேரம் மொதந்திருக்கும்...''

—சூளாமணி ஸ்தம்பித்த அந்த நொடியில் பஸ் புறப்பட்டது. அது கண்களை விட்டு மறைந்தும் விட்டது.

மறைந்தது அது மட்டும்தானா?

# மும்முனைகளில் முதல் முனை

ஆனந்தி



✕ திருவுடையம்மன், மேலூர்

கணித இயலில் மூன்று என்ற எண் மிகவும் முக்கியமானது என்பார்கள்.

மூன்று கண்களை உடைய தேங்காய் விநாயகப் பெருமானுக்கு உகந்த பொருளாக இருக்கிறது. மனிதர்களுக்கு முதலிரண்டு கண்களும் ஊனக்கண்கள். மூன்றுவது ஞானக்கண் அல்லவா?

தாபத்ரயம் மூன்று. தாபங்களைப் போக்கும் ஸத் சித் ஆனந்தம் மூன்று. பசு,பதி, பாசம் மூன்று. படைத்தல் காத்தல், அழித்தல் மூன்று. அயன், மால், சிவன் மூன்று. கலைமகள், அலைமகள், மலைமகள் மூன்று வேதியர்க்கு விதித்த அக்னி மூன்று. ஸத்வ, தமோ, ரஜோ குணம் மூன்று. இச்சா சக்தி, கிரியா சக்தி, ஞான சக்தி மூன்று... ஆசமனம் மூன்று தடவை செய்கிறார்கள்.

அதாவது தெய்வீக சம்பந்தமுடையது இந்த மூன்று என்னும் எண் என்று கூறலாம். மூன்று முறை வலம் வருகிறோம் அல்லவா?

பிற மதங்களான பௌத்த சமயம், கிறிஸ்துவ சமயம் இவற்றிலும் மூன்று என்ற எண் முக்கியத்துவம் பெற்றிருப்பதைக் காணலாம்.

லௌகிக வாழ்விலும் தனிச் சிறப்புடன் ஆட்சி செலுத்துகிறது மூன்று என்னும் இலக்கம். முக்கனி, முத்தமிழ், மும்மணி மூன்று நதிகள், மும்மருந்து (திரிகடுகம்) என்றெல்லாம் சிறப்பாகக் கூறுகிறோம். ஸங்கீத மும்மூர்த்திகளைத் தெய்வீக மூன்றோடு தான் சேர்க்க வேண்டும். மாதா, பிதா, குரு இது ஒரு முக்கோணம். கவிஞன், கவிதை, ரஸிகன் இது இன்னொரு அவசியமான முக்கோணம்.

மூன்று பக்கமும் ஒரே அளவுள்ள கோடுகளால் வரையப்பட்ட முக்கோண வடிவத்துக்கும் ஏதோ ஒரு சக்தி இருக்கத்தான் வேண்டும். தேவி உபாஸகர்களால் பூஜிக்கப்படும் ஸ்ரீசக்கரத்தைப் பார்த்திருப்பவர்கள் அதில் பலவித அளவுள்ள முக்கோணங்கள் ஒன்றுக்குள் ஒன்றாக வரையப்பட்டிருப்பதை அறிவார்கள்.

இரண்டு முக்கோணங்களை மேலும் கீழுமாக ஒன்றன் மேல் ஒன்றாய் வரைந்தால் நமக்கு ஒரு நக்ஷத்திர வடிவமே கிடைத்து விடுகிறது.



ஆறு முக்கோணங்களாகப் பெருகி நிற்பதால் இதை ஷண்முகப் பெருமானுக்கு உகந்த சக்கரம் என்றும் கூறுவார்கள்.

மேல் நோக்கிய முக்கோணத்தை வன்ஹி என்று சக்தி உபாஸகர்கள் குறிப்பிடுவார்கள். நம்முடைய இதயத்தில் எப்போதும் ஒளிவீசி நம்முடைய பக்தியை அதன் மேல் முனையில் தாங்கிக் கொண்டிருக்கிறது இந்த முக்கோணம். சாதகனுடைய உன்னதமான லக்ஷியத்தைக் குறிக்கிறது.

கீழ்நோக்கிய முக்கோணமோ அன்னையின் அருள் நம்மை நோக்கி இறங்கி வருவதைக் குறிக்கிறது.

✕ ஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள்



# தெய்வ தரிசனம்

இத்தகைய சிறப்புக்கள் வாய்ந்த முக்கோண வடிவத்தில் அமைந்திருப்பது பராசக்தியின் மூன்று அரிய தலங்கள். இவை திருமுல்லைவாயில், மேலூர், திருவொற்றியூர் என்ற சென்னையைச் சுற்றியுள்ள தலங்கள். வெள்ளிக்கிழமை, பௌர்ணமி இரண்டும் சேர்ந்து வருகின்ற தினத்தில் எப்படியேனும் கொடியிடையம்மன், திருவுடையம்மன், வடிவுடையம்மன் என்ற அழகிய திருநாமங்களுடைய அன்னை வடிவங்களைத் தரிசித்து விட்டால் இக, பர, இன்பங்கள் அனைத்தையும் அருளிவிடுவாள் அம்பிகை என்பது அடியார்களின் நம்பிக்கை.

மேலூர் என்ற பெயரையோ திருவுடையம்மன் உடனுறை திருமணங்கீசுவரர் என்ற இனிய திருநாமங்களையோ சில ஆண்டுகளுக்கு முன் யாருமே கேள்விப்பட்டதில்லை. மூன்றுவது குலோத்துங்க சோழன் காலத்தில் கட்டப்பட்டுப் பிற்காலப்பாண்டியர்களால் சுற்றுளியாக்கப்பட்ட இந்தக் கோவில் 1978–ஆம் ஆண்டுக்கு முன்னுல் இருக்குமிடம் தெரியாமல் முள் புதர்கள் மண்டிச் சிதலப்பட்டுப் பாழடைந்திருந்தது.

சில நூறு வருடங்களுக்கு முன்னுல் ஓர் இஸ்லாமிய அன்பர் இந்தக் கோயிலுக்கு வந்து தினமும் தொழுகை புரிந்து வந்தாராம். அவரைத் தொடர்ந்து பல இஸ்லாமிய அன்பர்கள் வந்து தொழுது சென்றூர்களாம். அந்த மகானுடைய சமாதி இந்தக் கோயிலின் அருகில் இருக்கிறது.

இதனுலோ, என்னமோ சைவ அன்பர்கள் இந்தக் கோயிலை அடியோடு புறக்கணித்து விட்டனர். சுமார் இருபது ஆண்டுகளுக்கும் மேலாக திருவிளக்குக் கூட ஏற்றி வைப்பாரின்றி மூடிக் கிடந்த ஆலயத்துக்கு ஏப்ரல் மாதம் 24–ந் தேதி மஹா கும்பாபிஷேகம் மிகவும் கோலாஹலமாக நடைபெற்றது. இதற்குக் காரணமாக இருந்தது ஒரு சுவையான சம்பவம்.

ஆடிட்டர் திரு. சுவாமிநாதன், அவருடைய இல்லத் துணைவியார் திருமதி லட்சுமி அம்மாள் இருவரும் காமாட்சியம்மனிடம் பக்தி கொண்டவர்கள். இவர்கள் ஒருசமயம் திரு. பி. எம். சாமி என்னும் பக்தர் 'அருள்வாக்கு' கூறுகிறூர் என்று கேள்விப்பட்டார்கள். அவரைப் பார்க்கச்

✠ மேலூர் கும்பாபிஷேகத்தில் ஜயேந்திரர்





✠ மேலூர் கும்பாபிஷேகம்

சென்ற போது, ''சென்னைக்கு வடமேற்குத் திசையிலுள்ள அன்னை அழைக்கிறுள்'' என்று அருட்செல்வரான சாமி அவர்கள் கூறினுர். திரு. சுவாமிநாதனுக்கு ஒன்றும் புரியவில்லை. ஆயினும் அன்று முதல் தேவி தரிசனத்துக்காக அலைந்தார். மணிக்குத் தம் வேலையை முன்னிட்டுச் சென்றவர் அங்கே பல திசைகளிலும் சென்று தேடினுர். தேடியலைந்ததற்குப்பலன் ஒருநாள் கிடைத்தே விட்டது. கொடிய முட்புதர் காட்டுக்குள்ளிருந்த திருவுடையம்மன் கோவிலைக் கண்டு மகிழ்ச்சியும், அதன் நிலையைக்கண்டு துயரமும் அடைந்தார்.

அதன் பிறகு அவருடைய பெருமுயற்சியால் நண்பர்களும், பொதுமக்களும் கொடுத்த ஊக்கத்தால், அருள்வாக்குக் கூறிய திரு. சாமியவர்களின் தொண்டினுல் இப்போது மேலூர் கோவில் மறுபடியும் சிறப்பான நிலைக்கு வந்திருப்பதைக் காண்கிறோம்.

அருள்மிகு மணங்கீசுவரர் இங்கே புற்றிடம் கொண்டாராகச் சுயம்புவாகத் தோன்றியவர். பெயரிலேயே திருவுடைய அம்பிகையோ மலர் மாலைகளை அணிந்து கொண்டு மணப்பெண் போல் சிவப்புநிற மடிசார் சேலை கட்டி பாசாங்குசம் தரித்து நிற்கிறுள். 'இதோ, நமக்கு அருள் செய்ய அடி எடுத்து வைத்து வந்து விடப் போகிறுள்!' என்று தோன்றுகிறது.

அன்னை வடிவமடா – அவள்
ஆதிபராசக்தி தேவியடா.

என்று பாரதியார் ஆனந்தப் பரவசராய்ப் பாடினுரே, அந்தப் பரவசம் நமக்குள்ளும் புகுந்து கொள்கிறது.

சந்நிதியில் ஏகக் கூட்டம். ஸ்ரீ சாமி அவர்களுடைய அருள்வாக்கைக் கேட்கக் காத்திருப்பவர் அனேகர். மெய்ம்மறந்த

நிலையில் சில பெண்கள் ஆடுகின்றனர் ''பக்தி என்னும் ஆனந்தக் களிப்பு வெளிப் படும் விதங்கள் தான் எத்தனை எத்தனை!'' என்று அதிசயப்பட்டு நின்றேன். இதுவே நமது சமயத்தின் வெற்றியாகும்' என்று எண்ணும்போதே இதுவே பலஹீனமாகவும் இருப்பதை ஒப்புக் கொள்ளத்தான் வேண்டி யிருக்கிறது!

கோவிலின் அற்புதமான, விலைமதிக்க முடியாத செல்வங்கள் இங்கே உள்ள செப்பு விக்ரஹங்களே என்று சொன்னால் மிகையாகாது. நடராஜ மூர்த்தியும் சிவகாமி யம்மனும் சாளுக்கியர் காலத்தில் வார்க்கப் பட்ட படிமங்கள் என்று கூறுகிறார்கள். இதற்குச் சான்றாகப் பீடத்திலுள்ள வாள், வராஹம் இந்த இரண்டு சின்னங்களையும் காட்டுகிறார்கள்.

ஸோமாஸ்கந்தர் படிமத்தின் அழகு மிக அபூர்வமானது! சின்னஞ்சிறு கந்தன் களிப் புடன் காணப்படுகிறான். உமையவள் பெருமிதத்துடன் அமர்ந்திருப்பது போல இருக்கிறது. அம்பிகையின் உத்ஸவ விக்ர ஹம், மேல் நாட்டு மியூஸியம் எதையும் அலங்கரிக்காமல் இங்கேயே நாம் கண்குளிரக் காணும்படி இருப்பது நாம் செய்த பாக்கி யம். சிலைத் திருட்டு செய்பவர்களை ஏமாற் றவே அம்பிகை முட்புதர்களை மண்டச் செய்து பலர் கண்களிலும் படாமல் மறைந்திருந்தாளோ என்று நினைக்கத் தோன்றுகிறது.

இந்த விலை மதிக்க முடியாத சிலைகளைத் திருடும் முயற்சி சமீபத்தில் நடந்ததாகக் கேள்விப்படும் போது மனம் பதைக்கிறது. இழந்த செல்வமெல்லாம் போதாதா? எத்தனை அரிய கலைச்செல்வங்களை இழந்து விட்டிருக்கிறோம். ''இனியாவது உனது மக்கள் விழித்துக் கொண்டு கோயில்களையும் விக்ரகங்களையும் பாதுகாத்து வைத்துக் கொள்ள வேண்டும். எங்களையும் காப் பாற்றி உன்னையும் பாதுகாத்துக்கொள் தாயே!'' என்று மானசீகமாகப் பிரார்த் தனை செய்து கொள்கிறோம்.

காலமாம் வனத்திலண்டக் கோலமா
மரத்தின்மீது
காளிசக்தி யென்றபெயர் கொண்டு —ரீங்
கார மிட்டுலவு மொரு வண்டு!

—பாரதியார்.

புகைப்படங்கள்: சரஸ்வதி சத்தியமூர்த்தி

நெல்லை மாவட்டம், காவல் கிணறு என்ற இடத் தில் உள்ள செக்போஸ்டில் எந்த நேரமும் சுமார் 10 பேர் தங்கள் பாக்கெட்டில் 450 ரூபாய் வைத்துக் கொண்டு நிற்பார்கள். எதற்கு? முந்திரி லோடு ஆந்திராவில் இருந்து குமரி மாவட்டத்துக்குக் கொண்டு வந்தால் 450 ரூபாய் செஸ் வரி கட்ட வேண்டும். அநேக லாரி டிரைவர்களிடம் பணம் இருக்காது. அப்போது இந்தக் கூலிக்காரர்கள் 450 ரூபாய் முந்திரிப் பருப்பு தொழிற் சாலை சார்பில் கட்டிவிட்டு லாரியின் கூடவே சம்பந்தப் பட்ட தொழிற்சாலைக்குச் சென்று விடுவார்கள். (இது தொழிலகம் இருக்கும் இடம் தெரியாமல் திணறும் லாரி டிரைவர்களுக்கு வசதியும் கூட) அங்கு போய் நூற்றுக்குப் பத்து என்ற கணக்கில் 45 ரூபாய் அதிக மாகப் பெற்றுக் கொள்வார்கள். இதற்காகவே சுமார் 100பேர் குமரி மாவட்டத்தில் உள்ளனர்.

—கருங்கல் ஆர். ஜார்ஜ்







எங்கள் ஊர் கிறிஸ்துவக் குடும்பத்தைச் சேர்ந்த திரு அலெக்ஸ் (அலெக்ஸாண்டர்) சென்னையில் பெரிய போலீஸ் அதிகாரியாக இருந்து வருகிறார்.

கடந்த 7—4—83 அன்று, ''கமுதிக்குப் போலீஸ் டி. எஸ். பி. அலெக்ஸ் பாண்டியன் வருகிறார், வரவேற்க வாருங்கள்'' என்று திடீரென்று ஊரெங்கும் நோட் டீஸ்கள் ஒட்டப்பட்டன. அதன்படி பலரும் ''சென்னை யில் உள்ள பெரிய போலீஸ் அதிகாரி அலெக்ஸ்தான் ஏதோ ஒரு விசேஷத்துக்காகக் கமுதிக்கு வருகிறார் என்று நினைத்தேன்.

பிறகுதான் விஷயம் தெரிந்தது. எங்கள் ஊர் ''அன்னை சகாயி'' தியேட்டரில் ''மூன்று முகம்'' சினிமா திரையிடப்படுவதை யொட்டி இந்த விளம் பரம் என்று!

—கமுதி திராவிடமணி

# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி '83





அமரர் கல்கி அவர்களின் நினைவாக ஆண்டுதோறும் நடக்கும் இந்தச் சிறு கதைப் போட்டியில் வழக்கம்போல் இந்த ஆண்டும் எழுத்தாளர்கள் பெருமளவில் உற்சாகத்துடன் கலந்து கொண்டு ஒத்துழைக்க வேண்டுகிறோம்.

| | |
|---|---|
| **முதல் பரிசு** | **ரூ. 1000** |
| **இரண்டாவது பரிசு** | **ரூ. 500** |
| **மூன்றும் பரிசு (இரு கதைகளுக்குத் தலா ரூ. 250 வீதம்)** | **ரூ. 500** |

ஆக மொத்தம் ரூ. 2000 பரிசுகளாக வழங்கப்பெறும்.

தவிர பிரசுரத்துக்கு ஏற்கப்படும் ஒவ்வொரு கதையும் ரூ. 100 சன்மானம் பெறும். அறிமுக எழுத்தாளர்களுக்குப் போனஸ் உண்டு.

✻ கதைகள் சொந்தக் கற்பனை என்ற உறுதிமொழி தேவை.

✻ அறிமுக எழுத்தாளர் எனில் இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லை என்றும் போட்டி முடிவு அறிவிக்கப்படும் வரை எழுத மாட்டேன் எனவும் உறுதிமொழி தரவேண்டும்.

✻ நடுவர் குழு கதைகளைப் பரிசீலித்துப் பரிசுக்குரிய கதைகளைத் தேர்ந்தெடுக்கும்.

✻ கதைகளை அனுப்பக் கடைசி தேதி ஜூன் 15.

✻ உறையின் மேல் 'அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி' என்று குறிப்பிடுதல் அவசியம்.

✻ பிரசுரத்துக்கு ஏற்கப்படாத கதைகளைத் திரும்பப் பெறப் போதிய அளவு தபால் தலை ஒட்டிய சுய விலாசமிட்ட உறையைக் கதையுடன் கூடவே அனுப்புதல் வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.

✻ கதைகள் கல்கியில் நாலு பக்கங்களுக்கு மேற்படாதிருப்பது நலம். ஒருவர் எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.

✻ எவ்விதக் கடிதப் போக்குவரத்தும் கிடையாது.

✻ சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.

✻ போட்டி முடிவும் முதல் பரிசுக் கதையும் கல்கி ஆகஸ்டு 7 ஆண்டு மலரில் பிரசுரமாகும்.

**ஆசிரியர், கல்கி, சென்னை - 600 032**



✖ கருணாநிதி

✖ ஆர். கப்பாரால், திருக்கோவலூர்.

? ஆபாச எழுத்தாளர்களை ஒழிக்க ஆவேசத்துடன் எழுந்துள்ள நீரர் துர்வாசர் பற்றி....?

துர்வாசர் நீரம் போன வாரக் கதை. அவரை விடப் பெரிய வீரர் தாம்தான் என்று காட்டிக் கொள்வதே போல் புறப்பட்டிருக்கிறார் அரசு. துர்வாசரைக் கிண்டல் செய்ய, பல ஆண்டுகளுக்கு முன் புகைப்படக் காட்சியொன்றில் இடம் பெற்ற நிர்வாணப் படத்தைப் பிரசுரித்து 'இது போன்ற ஆபாசம் தேவையா?' என்று கேள்வி எழுப்பியது குமுதம்தான். நாளடைவில் 'தேவையா?' என்ற கேள்வியைத் தந்திரமாக விலக்கி விட்டு ஆபாசத்தை மட்டும் வைத்துக் கொண்டது. துக்ளக்குக்கு இது போன்ற தந்திரங்கள் தெரியாது.

✖ வி. சந்திரசேகரன், வீரராக்கியம்.

? சினிமா பாப்புலாரிட்டியை வைத்து ஆட்சியைப் பிடித்து வரும் அரசியல் தொடர்ந்து நீடிப்பது நாட்டு நலனுக்கு உகந்ததுதானா?

உகந்தது அல்லதான். ஆனால் என்ன செய்வது? நேர்மை; நல்லொழுக்கம், துணிவு, ஞானம் ஆகியன மக்களிடம் பாப்புலாரிட்டியைத் தேடித் தராத போது பலரும் சினிமா வழியை நாடுவது இயல்பே. சினிமாவிலே கிண்டலுக்கு உள்ளாகும் எம். எல். ஏக்கள் மக்களிடையே தங்கள் மதிப்பை உயர்த்திக் கொள்ள சினிமா எடுக்கலாம் என்றுதானே சட்டசபையிலேயே யோசனை தெரிவிக்கிறார்கள்!



✖ நெப்போலியன்

✖ எஸ். ரவீந்திரன், கடலூர்.

? எது எதற்கோ வெற்றி விழாவும் பாராட்டு விழாவும் நடத்தும் தமிழக அரசியல் கட்சிகள் சென்னைக்குக் கிருஷ்ணா நதி நீர் கொடுத்து உதவிய என்.டி. ராமராவுக்கு நன்றி தெரிவிக்கப் பாராட்டு விழா நடத்தினால் என்ன?

அட நீர் ஒண்ணு. ரத்தத்தின் ரத்தங்கள் இது எம். ஜி. ஆரின் சாதனை என்று நம்பிக் கொண்டிருக்க, இ. காங்கிரஸ், இது அம்மையார் முன்பே செய்து வைத்த ஏற்பாடு என்று கதை பரப்பிக் கொண்டிருக்க, தி. மு. க., செலவாகப் போகும் 720 கோடியில் எத்தனை கோடியை ஆளும் கட்சி ஏப்பம் விட்டதாகக் குற்றம் சாட்டலாம் என்று இப்போதே கணக்குப் போட ஆரம்பித்திருக்க.... நீர் என்னடாவென்றால் கதையையே மாற்றுகிறீரே.... நடக்குமா நன்றி கூறும் விழா!

✖ நா. கொழுந்துவேல், நாகர்கோயில்.

? எங்களுக்கு அரிசிதான் வேண்டும், ரயிலில் தண்ணீர் வேண்டாம் என்று அமைச்சர் காளிமுத்து கூறியிருக்கிறாரே?

! ரயிலில் அரிசி மூட்டைகளாக வந்திருந்தால் எங்களுக்கு அரிசி வேண்டாம் குடிக்கத் தண்ணீர் தான் வேண்டும்

# என்.டி.ஆருக்கு

என்று தோசையைத் திருப்பிப் போடக் காளிமுத்துவுக்கா தெரியாது!

✖ ஆர். விமலா வித்யா, நாமக்கல்.

? கருணாநிதி மீதான குற்றச்சாட்டை நிரூபிக்க முடியாத அமைச்சரைப் பதவி விலகக் கோருவது சட்டப்படி அவசியமில்லையே. பின்னர் தார்மீகக் கடமை என வாதிடுவது இன்றைய சூழ்நிலையில் எடுபடுமா?

! தார்மீகக் கடமை என்பது கொஞ்சம் மானம், வெட்கம், சூடு, சுரணை உள்ளவர்களுக்குத் தான் புரியும். இன்றைய நமது அரசியல்வாதிகள் இந்த உணர்வுகளையெல்லாம் கடந்த ஞானிகள். அவர்களுக்குச் சுயநலம் என்ற கடவுளைப் பதவி என்ற பீடத்தில் அமர்த்திப் பணம் என்ற பூக்களால் அர்ச்சிப்பது ஒன்றே தெரியும்.

✖ பி. இராமகிருஷ்ணன், மேலகிருஷ்ணன்புதூர்.

? காந்தி படத்தைத் தொடர்ந்து நேரு படம் ஜின்னா படம் ஆகியன தயாராவது குறித்து என்ன நினைக்கிறீர்கள்?

! அட்டன்பரோவை நினைத்து வான் கோழியையும் நினைக்கிறேன்.

✖ பா. நாராயணன், சென்னை-5.

? தமிழகம் இன்று யாரிடமோ ஆட்சியை ஒப்பு

டைத்துவிட்டு நெருப்பிலிட்ட புழுப்போல் இருக்கிறது என்று கலைஞர் கூறுகிறாரே?

! வாணலியின் சூடு பொறுக்க முடியாமல் தான் அது துள்ளி நெருப்பில் விழுந்திருக்கிறது. பாவம்!

✖ ஆர். அரிகோபி, குடியாத்தம்.

? எவ்வளவுதான் உன்னிப்பாகக் கவனித்து எழுதினாலும் ஓரிரு எழுத்துப் பிழைகள் ஏற்படுவதைத் தவிர்க்க முடியவில்லையே?

! அதைப் பற்றிக் கவலைப்படாதீர்கள். பிரும்மாவிடமே இந்தக் குறைபாடு இருக்கிறது. அதனால் தான் அடிக்கடி கடல்மேல் போக வேண்டிய ஏழு கஸ்டம்ஸ் அதிகாரிகள் நீச்சல் தெரியாதவர்களாய் இருந்து, படகு மூழ்கவும் உயிரை விட்டிருக்கிறார்கள்! கஸ்டம்ஸ் இலாகாவுக்கென்று படகு இல்லாமல், தனியார் படகை வாடகைக்கு எடுத்திருக்கிறார்கள். அந்தப் படகு கடல் பயணத்துக்கு ஏற்றதுதானா என்று சோதிக்காமல் ஏறிப் போயிருக்கிறார்கள். பயணிகளை, அவர்கள் உடைமைகளை அங்குலம் அங்குலமாகச் சோதிக்கும் கஸ்டம்ஸ் அதிகாரிகள், தங்களை, தங்கள் உபகரணங்களைச் சரியான சோதனைக்கு உள்ளாக்கிக் கொள்ளாததற்கு அவர்கள்

## நன்றி விழா உண்டா?

தலையெழுத்தில் ஏற்பட்ட பிழைகள் தான் காரணமாயிருக்க வேண்டும்.

✖ ஏ. உமாதேவி, கண்டனூர். ★

? ரஷ்யா, அமெரிக்கா, ஜப்பான் போன்று இந்தியா என்றாவது முன்னேறும் என்ற நம்பிக்கை உங்களுக்கு இருக்கிறதா?

! இல்லாமல் என்ன? ஒரு உதாரணம்: லூகேமியா என்ற இரத்த கான்ஸர் நோய் உடைய சிறுவன் வந்தனாவுக்கு வியத்தகு ஆபரேஷன் செய்திருக்கிறார்கள், பம்பாய், டாட்டா மெமோரியல் ஆஸ்பத்திரி டாக்டர்கள். ரத்தத்தில் சிவப்பணுக்கள் வெள்ளை அணுக்கள் என்று உண்டு. வெள்ளை அணுக்கள் அபரிமிதமாக உற்பத்தி ஆவதுதான் லூகேமியா என்ற ரத்த கான்ஸர் வியாதி. வெள்ளை அணுக்கள் உற்பத்தி ஆவது எலும்பின் மையத்தில் காணப்படக் கூடிய திசுக்களான போன் மேரோ பகுதியில். ஆபரேஷனுக்கு முன்பு ரத்தத்திலும் போன் மேரோவிலும் உள்ள லூகேமியா வெள்ளணுக்களை முழுவதுமாகக் கதிரியக்கத்தால் அழித்து விடவேண்டும். பிறகு ஆபரேஷன் செய்து நோயுற்றிருக்கும் போன் மேரோவை நீக்கி நன்கொடையாகப் பெறப்பட்ட புதிய போன் மேரோவை அவ்விடத்தில் வேரூன்ற வைக்க வேண்டும். வந்தனாவுக்கு ஆரோக்கியமான போன்மேரோவை நன்கொடையாகத் தந்தவன், அவன் சகோதரன் உமேஷ். ரொம்ப ஆபத்தான இந்த ஆபரேஷனுக்கு ஆன செலவு 2 லட்சத்துக்கும் குறைவு. அமெரிக்காவில் 8 லட்சம் ஆகும். ஆக அமெரிக்கா போல நாமும் முன்னேற முடியும் என்று நிரூபணமாகிறதல்லவா? இங்கு அறிவாற்றலுக்குப் பஞ்சமில்லை. முன்னேற விடாமல் தடுப்பது அரசியல்வாதிகளின் உளுத்துப் போன கொள்கைகள்.



✖ என்.டி.ஆர்.

✖ எம். நாகேந்திரகுமார், ஓசூர்.

? கத்தி முனையை விடப் பேனா முனை கூர்மையானதா?

! 1815-ல் நெப்போலியன் தான் சிறைப்பட்டிருந்த எல்பா தீவிலிருந்து தப்பி பாரீஸ் நோக்கிப் படையெடுத்து வந்தபோது மார்ச் 9 பத்திரிகையில் செய்தித் தலைப்பு: மிருகம் கூண்டிலிருந்து தப்பி விட்டது! மார்ச் 18 தலைப்பு: கொடுங்கோலன் படையெடுத்து வருகிறான்! மார்ச் 20 தலைப்பு: நெப்போலியன் பாரீஸை நெருங்குகிறார்! மார்ச் 22 தலைப்பு: ராஜாதி ராஜ ராஜ கம்பீர சக்கரவர்த்தி பாரீஸுக்குள் நுழைந்தார்! வாழ்க மாமன்னர்!.... இது போன்ற மழுங்கிய பேனா முனைகளை நாமும் தான் எமெர்ஜென்ஸி காலத்தில் நிறையவே பார்த்தோமே! இன்னும் சந்தேகமா?

★ ரூ. 10 பரிசு பெறுபவர்:-
ஏ. உமாதேவி,
74, ராஜாஜி தெரு,
கண்டனூர்-623 104.



✖ காசிமுத்து

# நீங்கள் கேட்டவை

# நியூட்ரமுல் சக்தி.

## சேம்பியன்கள் தேர்ந்தெடுக்கும் சக்தி.

நியூட்ரமுல். அமுல் பால்வளம். அருமையான மால்ட்.
ஆரோக்கிய வைட்டமின்கள். ஆர்வமிகு புரதம்.
ஆதார உலோகதாதுக்கள். சப்புக் கொட்டிட சாக்கலேட்...
இவ்வளவுக்கும் விலை மலிவு—போர்ன்விடா, பூஸ்ட்,
மால்டோவா எதனையும் விட. மறவாதீர்கள் ஐஎஸ்ஐ தர
முத்திரை தாங்கியது நியூட்ரமுல் ஒன்றுதான்.
விளங்குவீர் நியூட்ரமுல் 'வஸ்தாத்'தாக.

உயரம், வலிமை, உடல்திடம்--
பெருக்குவது எப்படி ?

பார்த்ததியாச் சலுகை: பலம்பெருக்கப் புத்தகம்!

NUTRAMUL P.O. BOX 10148, BOMBAY-400 001. kk

பெயர் ________________
(கொட்டை எழுத்துக்களில்)

முகவரி ________________




விற்பனைதல் விடு: போர்
குஜராத் கோ ஆபரேட்டிவ் மில்க்
மார்க்கெட்டிங் ஃபெட. லிட.,
ஆனந்த் 388 001.

daCunha/GCM/78/TM/82

# 'ஓஸி' எப்படி வந்தது?

## பொது அறிவுப் பக்கங்கள்



✕ தேசியக் கல்லூரி முதல்வர் திரு. கிருஷ்ணமூர்த்தி வெற்றிபெற்ற செயின்ட்ஜோசப் கல்லூரி மாணவர்களுக்கும் பரிசளிக்கிறார்.

**இந்த வாரம் 'குவிஸ்' திருச்சி நேஷனல் உயர்நிலைப் பள்ளியில் நடைபெற்றது. செயின்ட் ஜோசப் கல்லூரி மாணவர்கள் மோகன்தாஸ், இராமசாமி பிஷப் ஹீபர் கல்லூரி மாணவர்கள் ஜான் கென்னடி, ஜெயகுமார் ஆகிய நான்கு பேரும் நிகழ்ச்சியில் பங்கேற்றனர்.**

**நாணயத்தைச் சுண்டியதும், பிஷப் ஹீபர் கல்லூரி மாணவர்கள் கேட்டபடியே தலை விழுந்தது. முதல் கேள்வியைக் கேட்டு நிகழ்ச்சியைத் துவக்கியது பிஷப் ஹீபர் கல்லூரி. பிறகு மாறி மாறிக் கேள்விகள் கேட்க நிகழ்ச்சி தொடர்ந்தது.**

பிஷப் ஹீபர் மாணவர்கள் ஜான் கென்னடி, ஜெயகுமார் இருவரும் கேட்ட கேள்விகளும் அவற்றுக்குச் சரியான விடைகளும்:

கேள்வி (1): இந்தியாவுக்கும் வெஸ்ட் இண்டீஸுக்கும் டெஸ்ட் மாட்ச் நடந்து கொண்டிருக்கிறதே! வெஸ்ட் இண்டீஸைக் கண்டுபிடித்தவர் யார் என்று சொல்ல முடியுமா?

விடை: கிரிஸ்டோபர் கொலம்பஸ்.

(மோகன்தாஸ் விடையைச் சொல்லிவிட்டார்.)

கேள்வி (2): ஒரு நாழிகை என்று சொல்கிறோம். ஒரு மணிக்கு எத்தனை நாழிகை என்று சொல்லுங்களேன்?

சரியான விடை: இரண்டரை நாழிகை.

(விடை சொன்னவர்: ராமசாமி.)

கேள்வி (3): உஸ்மானியா பல்கலைக் கழகம் எங்கே இருக்கிறது?

சரியான விடை: ஹைதராபாத்தில்.

(செயின்ட் ஜோசப் கல்லூரி விடை சொல்லவில்லை.)

கேள்வி (4): காசு கொடுக்காமல் கிடைப்பதை 'ஓஸி' என்று நாம் சொல்கிறோம். ஆனால் 'ஓஸி' என்ற வார்த்தை எப்படி வந்தது என்று சொல்லுங்கள் பார்க்கலாம்.

சரியான விடை: கிழக்கிந்தியக் கம்பெனியார் கம்பெனித் தபால்களை ''ஆன் கம்பெனி சர்வீஸ்'' (On Company Service) என்பதைச் சுருக்கமாய் OCS என்று எழுதிக் கட்டணம் செலுத்தாமல் அனுப்பி வைப்பது வழக்கம். இந்த OCS என்பதே நாளடைவில் OC என்று ஆகி, கட்டணமில்லாத எல்லாவற்றுக்குமே பெயராய்ப் போய்விட்டது.

(செயின்ட் ஜோஸப் கல்லூரி விடை சொல்லவில்லை.)

கேள்வி (5): இன்றைய நிலவரப்படி ரூபாயின் மதிப்பு எவ்வளவு?

சரியான விடை: 21.78 பைசா.

(செயின்ட் ஜோசப் கல்லூரி 20 பைசா என்று சொன்னதால் அரை மார்க்)

கேள்வி (6): நேஷனல் ஜியோகிராபிக் மேகஸின் எங்கிருந்து வெளியாகிறது?

சரியான விடை: அமெரிக்க ஐக்கிய நாட்டிலிருந்து. (செயின்ட் ஜோசப் கல்லூரி சரியான விடை சொல்லவில்லை.)

கேள்வி (7): இந்தியா இன்று உலகிலேயே மிக அதிக அளவில் சினிமாப் படங்கள் தயாரிக்கும் நாடுகளில் ஒன்றாய்த் திகழ்கிறது. இந்தியாவில் தயாரிக்கப்பட்ட முதல் பேசும் படம் எது என்று சொல்ல முடியுமா?

சரியான விடை: ஆலம் ஆரா.

(பதில் சொன்னவர் ராமசாமி)

**செ**யின்ட் ஜோஸப் கல்லூரி மாணவர்கள் ராமசாமியும், மோகன்தாஸும் கேட்ட கேள்விகளும் அவற்றுக்குச் சரியான விடைகளும்:

கேள்வி (1): உலகில் எத்தனையோ வகையான விளையாட்டுக்கள் இருக்கின்றன. ஆனால் எந்த விளையாட்டுக்கு மிகப் பெரிய விளையாடும் இடம் (Court) வேண்டும் என்று சொல்லுங்கள்.

சரியான விடை: போலோ விளையாட்டுக்கு. தேவையானது 5 ஹெக்டேர் பரப்புள்ள இடம். குறைந்த பட்சம் 300 கெஜ நீளமும், 200 கெஜ அகலமும் கொண்டிருக்க வேண்டும்.

✕ ஜான் கென்னடி, ஜெயகுமார்



(பிஷப் ஹீபர் விடையளிக்கவில்லை.)

கேள்வி (2): சிவனடியார் போல வேடம் போட்டுக் கொண்டு வந்த பகை நாட்டு அரசனால் கொலை செய்யப்பட்ட நாயனார் யார்?

சரியான விடை: மெய்ப்பொருள் நாயனார்

(விடை சொன்னவர்: ஜான் கென்னடி)

கேள்வி (3): ஒரு காலன் என்பது எத்தனை லிட்டர்.

சரியான விடை: 4·53 லிட்டர்.

(பிஷப் ஹீபர் சரியான விடை சொல்லவில்லை.)

கேள்வி (4): ஆண்டுதோறும் சூரிய கிரகணங்களும், சந்திர கிரகணங்களும் வந்து கொண்டுதான் இருக்கின்றன. ஆனால், அதிகபட்சம், குறைந்தபட்சம் எத்தனை சூரிய கிரகணங்கள் ஏற்படும் ஒரு வருடத்தில்?

சரியான விடை: அதிகபட்சம் ஐந்து குறைந்தபட்சம் இரண்டு.

(சரியான விடையை பிஷப் ஹீபர் சொல்லவில்லை.)

கேள்வி (5): பம்பாயில் உள்ள சர்வதேச விமான நிலையத்தின் பெயர் என்ன?

சரியான விடை: சஹார்.

(சாந்தா குரூஸ் என்று தவறான விடை சொன்னார்கள்.)

கேள்வி (6): இரண்டு பார்லிமெண்ட் கூட்டத் தொடர்களுக்கிடையில் அதிகபட்சம் எவ்வளவு இடைவெளி இருக்கலாம்?

சரியான விடை: ஆறு மாதங்கள்.

(ஜெயகுமார் சரியான விடை சொன்னார்.)

கேள்வி (7): ஆல் இண்டியா ரேடியோ ஆரம்பிக்கப்பட்டபொழுது அதற்கு என்ன பெயர்?

சரியான விடை: இந்தியன் பிராட்காஸ்டிங் சர்வீஸ்.

(ஆகாசவாணி என்று தப்பாய்ச் சொன்னார்கள்.)

பிஷப் ஹீபர் கல்லூரி மாணவர்கள் பெற்ற பாயிண்டுகள் ஐந்தரை.

செயிண்ட் ஜோஸப் கல்லூரி மாணவர்கள் பெற்ற பாயிண்ட்கள் எட்டரை.

வெற்றி பெற்ற மாணவர்கள் ராமசாமி, மோகன்தாஸ், இருவருக்கும் தேசியக் கல்லூரி முதல்வர் திரு கிருஷ்ணமூர்த்தி 'கல்கி' சார்பில் ரூபாய் முப்பது பரிசாக வழங்கினார். வெற்றி பெற்றவர்களுக்கும் வெற்றி வாய்ப்பினை இழந்த மாணவர்களுக்கும் புத்தகங்கள் பரிசாகக் கொடுக்கப்பட்டன.

பரிசு வழங்குகையில் "அன்று அமரர் கல்கி அவர்கள் படித்த திருச்சி தேசிய உயர்நிலைப் பள்ளியில் இன்று கல்லூரி மாணவர்களுக்குக் கல்கி பத்திரிகை 'க்விஸ்' நடத்திப் பரிசு வழங்குகிறது! என்ன பொருத்தம் பார்த்தீர்களா?" என்று வியந்து கூறினார்.

நன்றி: தேசியக் கல்லூரி ஆங்கிலப் பேராசிரியர் திரு எஸ். ராமச்சந்திரன் அவர்களுக்கு.

ஏற்பாடு, தொகுப்பு: **எஸ். சந்திரமௌளி ப்ரியன்**

புகைப்படம்: **திருச்சி சம்பத்**

---

பெட்ரோலை மிச்சப் படுத்துவதில் அமெரிக்கர்கள் தீவிரமாக இறங்கியுள்ளனர். வீ சோகல் என்னும் அமெரிக்க மாணவர் ஸான் டிகோ நகரில் உள்ள பல் போவா பார்க்குக்கு வருபவர்களைக் குறைந்த கட்டணத்தில் சுற்றிக் காட்ட ஒரு பெடிகாப் தயார் செய்தார். அமெரிக்க மக்கள் 'ஓகோ' எனப் புகழும் இந்தப் பெடிகாப் சாட்சாத் நமது சைக்கிள் ரிக்‌ஷாவேதான்!

தகவல்: உஷா சுப்பிரமணியன்







சண்டிகரைச் சேர்ந்த நான்செஸ் கிளப் இப்போது புதிதாக ஒரு கிளையை ஆரம்பித்திருக்கிறது. லஞ்ச ஊழல் பிரிவு என்ற இந்தப் பிரிவு நகரத்தில் உள்ள பிரமுகர்கள், அரசியல்வாதிகள், பெரிய அதிகாரிகள் ஆகியோரில் லஞ்ச ஊழல் செய்பவர்களுக்குப் பரிசுகள் வழங்கிக் கௌரவிக்கத் திட்டமிட்டிருக்கிறது. இம்மாதிரிப் பிரமுகர்களுக்கு வெளியில் தெரியாத வகையில் விருதும் கேடயமும் வழங்கவிருக்கிறது.

—ஏ.கே. நாசர்

# காவல் துறைக் கன்னியர்



பெண்கள் காவல் துறையில் சேர்ந்து பன்னிரண்டு ஆண்டுகள் ஆகிறது. கமிஷனர் திரு. ஸ்ரீபால் அவர்களிடம் இரண்டு பெண் சப் – இன்ஸ்பெக்டர்களை அறிமுகப்படுத்தும்படி கேட்டேன். என் விருப்பப்படி இருவரை அழைத்து அறிமுகப்படுத்தினார். இருவரும் இருபத்தி நான்கு வயது பட்டதாரிகள். பெரிய விவசாயக் குடும்பத்தைச் சேர்ந்த குமாரி வசந்தகுமாரி திருவல்லிக்கேணி காவல்நிலையத்தில் பணிபுரிகிறார். மற்றவர் குமாரி வசந்தா மைலாப்பூர் காவல் நிலையத்தில் பணிபுரிகிறார். இருவருக்கும் கீழே பத்து கான்ஸ்டபிள்களும், ஒரு ஹெட் கான்ஸ்டபிளும் இருக்கிறார்கள்.



குமாரி வசந்தா

சாதாரணமாக இவர்கள் இரட்டைப் பின்னல் போட்டுக் கொண்டு அதைக் கொண்டையாகத் தூக்கிக் கட்டிக் கொள்ள வேண்டும். காதில் தொங்கட்டான் எதுவும் போட்டுக் கொள்ளக் கூடாது. கைகளில் வளையல்கள் அணியக் கூடாது. (சிலர் காதில் பெரிய வளையமும் காலில் ஹீல்ஸ் வைத்த ஷூவும் போட்டுக் கொள்கிறார்கள் என்று செய்தி கிடைத்தது. இப்படி எல்லாம் செய்யக் கூடாது என்று திரு. ஸ்ரீபால் கண்டித்ததைக் கவனித்தேன்) இவர்களுக்கு ஆரம்பத்தில் ஆண் போலீஸ் போல உடையணிய வேண்டும் என்றுதான் உத்தரவு. ஆனால் பிறகு காக்கி பாண்டும் மேலே காக்கி புஷ் ஷர்ட்டும், துணி பெல்ட்டும் அணியலாம் என்று மாற்றியிருக்கிறார்கள். ஆனால் இதைவிட முந்தையது தான் அழகாக இருக்கிறது என்று கூறுகிறார்கள்.

முதலில் போலீஸ் கான்ஸ்டபிள் கிரேட் என்று நியமிக்கப்பட்டுச் சுமார் ஏழு வருடங்களில் ஹெட் கான்ஸ்டபிளாகவும் பத்து வருடங்களில் சப் – இன்ஸ்பெக்டராகவும் பதவி உயர்வு பெறுகிறார்கள். பதவி ஏற்ற முதல் இரண்டரை வருடங்களுக்குள் திருமணம் செய்து கொள்வதானால் உத்தரவு பெற்றுக் கொள்ள வேண்டும். அதற்குப் பிறகு தாய்மை அடைந்தால் இரண்டு மூன்று மாதங்கள் கழித்து ஸ்டேஷனிலேயே கேஸ் டைரி எழுதுவது. ரெக்கார்டுகள் வைத்துக் கொள்வது போன்ற லேசான வேலைகளே கொடுக்கப்படுகிறது.



வசந்தகுமாரி

தமிழ்நாட்டில் எழுபத்தி ஏழு பெண் சப்– இன்ஸ்பெக்டர்களும் அறுநூறு கான்ஸ்டபிள்களும் இருக்கிறார்கள். இதில் ஆறு சப் – இன்ஸ்பெக்டர்கள் சென்னை நகரத்தில் மட்டும் இருக்கிறார்கள். ஆனால் இப்போது இருக்கும் எஸ். ஐ. எல்லாருமே நேர்முகமாக இந்தப் பதவிக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் தான். கான்ஸ்டபிளாகச் சேர்ந்து இது வரை யாரும் பதவி உயர்வு பெறவில்லையாம். ''சாதாரணமாக எங்களுக்குக் காலை எட்டு மணி முதல் பன்னிரண்டு மணி வரையும் மாலை நான்கு முதல் எட்டு மணி வரையும் தான் வேலை நேரம். ஆனால் எங்களால் அவ்வளவு கரெக்டாக இருக்க முடியாது. பெரிய கூட்டங்கள், ஊர்வலங்கள், கலவரம் இப்படி நடக்கும்

வாசகர் போட்டி:

# எழுதியது யார்?

## பரிசு ரூ250/-

இந்த இதழில் நாலு சிறுகதைகள் இடம் பெற்றுள்ளன. அவற்றை எழுதியவர்கள் பின்வரும் ஐவரில் நால்வர் மட்டுமே!

(1) ஜி. நடராஜன், (2) ஜி. எஸ். பாலகிருஷ்ணன், (3) காடவன், (4) இந்திரா சௌந்தரராஜன், (5) ராஜேஷ்குமார்.

இவர்களில் எந்தக் கதையை யார் எழுதியது? கீழேயுள்ள கூப்பனைப் பூர்த்தி செய்து இந்த அரைப் பக்கத்தைக் கத்தரித்து அனுப்புங்கள். நாலு கதைகளையும் நாலு எழுத்தாளர்களையும் சரியாகப் பொருத்தினால் பரிசு ரூ. 250/-. ஒருவருக்கு மேல் சரியாக எழுதினால் பரிசு பகிர்ந்தளிக்கப்படும். 10 பேருக்கு அதிகமாக சரியான விடை எழுதினால் அவர்களில் குலுக்கல் முறையில் 10 பேர் தேர்ந்தெடுக்கப்படுவர்.

உறையின் மேல் ''எழுதியது யார்?'' என்று அவசியம் குறிப்பிடவும். முடிவு தேதி: 23.5.83.

கதை: அந்தஸ்து
எழுதியவர்:—
கதை:— அசையும் அஸ்திவாரங்கள்.
எழுதியவர்:—
கதை:— விஷப்பரீட்சை
எழுதியவர்:—
கதை:— கருப்பையா இனி பள்ளிக்கூடம் போகக் கூடாது
எழுதியவர்:—

என் பெயர்:—

விலாசம்:—

கையெழுத்து:—

போது அதிக நேரம் வேலை செய்ய வேண்டியிருக்கும்.''

சாதாரணமாக இவர்களுக்குப் பெண்கள் பங்கேற்கும் ஊர்வலங்களில் பந்தோபஸ்து, கோயில்களில் பந்தோபஸ்து, விபச்சார கேஸ்கள், அடிபட்டுக் கொண்டு வரும் கேஸ், டிராஃபிக் கண்ட்ரோல், ரேஷன் கடைகளில் க்யூவில் கலாட்டா நடக்காமல் பார்த்துக் கொள்வது, தியேட்டர்களில் பிளாக் மார்க்கெட்டில் டிக்கெட் விற்பவர்களைப் பிடிப்பது இப்படிப்பட்ட கடமைகள் கொடுக்கப்படுகின்றன. சமீபத்தில் தலைநகரில் நடந்த ஏஷியாடிற்குத் தமிழ்நாட்டிலிருந்து சென்ற ஆறு எஸ். ஐக்களில் வசந்தகுமாரியும் ஒருவர். இவர்களுடைய சேவையைப் பாராட்டிச் சான்றிதழ்களும் ஷீல்டும் கொடுக்கப்பட்டன. தில்லி பெண் போலீஸ் புடவை தான் கட்டிக் கொள்கிறார்களாம்.

மைலாப்பூர் காவல் நிலையத்தில் இருக்கும் வசந்தா கூறுகிறார்: ''எங்கள் ஏரியா விபச்சார கேஸ்களுக்குப் பிரசித்தம். ஒரு பிரபல ஓட்டல், லஸ் கார்னரில் ஒரு கட்டிடத்தில், சலிவன்ஸ் கார்டன் தெருவில் ஒரு கட்டிடத்தில் இங்கெல்லாம் நாங்கள் அடிக்கடி ரெய்டு செய்வோம்.''

''இதனுலெல்லாம் விபச்சாரத்தை நிரந்தரமாக ஒழித்து விட முடியுமா உங்களால்?''

''அது முடியாது. நாங்கள் கேஸ் புக் செய்து ஸ்டேஷனுக்கு அழைத்து வந்தால் உடனே அந்தப் பெண்களுடன் சம்பந்தப்பட்டவர்கள் அவர்களை அபராதம் கட்டி அழைத்துச் சென்று விடுவார்கள். மீண்டும் பழைய கதை தான். இதேபோல் குப்பங்களுக்குச் சென்று கள்ளச் சாராயம் மற்றும் கண்டிச் சோறு காய்ச்சுகிறவர்களையும் பிடிக்கச் செல்வோம். ஒருமுறை இரவு பதினெரு மணிக்கு அப்படிச் சென்ற போது சிலரைப் பிடிக்க முடிந்தது. வேறு சிலர் கடலில் மிகத் தொலைவு சென்று 'முடிந்தால் பிடியுங்கள்' என்று சவால் விட்டார்கள். சில சமயம் சண்டை போட்டுக் கொண்டு ரத்த வெள்ளமாக வருவார்கள். அவர்களுக்கு முதலுதவி அளித்து, பெண்களாக இருந்தால் உடை மாற்றி, ரத்தக் கறை படிந்த உடைகளை கோர்ட்டுக்கு அனுப்பி... இப்படிப் பல கடமைகள். பெண் குற்றவாளிகளை மாலை ஆறு மணிக்கு மேல் காவல் நிலையத்தில் வைக்கச் சட்டம் இடையாது. அதனுல் அதற்குள் கமிஷனர் அலுவலகத்திற்குக் கொண்டு பத்திரமாக சேர்த்து விடுவோம். (போலீஸே பெண் குற்றவாளிகளைக் கற்பழிக்கும் நிகழ்ச்சிகள் இனி நடக்க வாய்ப்பில்லை.) குடித்து விட்டுக் கலாட்டா செய்து கொண்டிருக்கும் ஆண்களை நாங்கள் சட்டையைப் பிடித்து இழுத்துக் கொண்டு போய் ஸ்டேஷனில் ஒப்படைப்பதுண்டு.''

''நீங்கள் இந்த உடையில் செல்லும் போது யாராவது கேலி செய்வதுண்டா?''

''முதலில் எங்களை வேடிக்கை பார்த்தார்கள். ஆனுல் இப்போது எங்களுக்கு மதிப்பும் மரியாதையும் கொடுக்கிறார்கள். கேலி செய்ய யாரும் துணிவதில்லை.''

பெண் சப் — இன்ஸ்பெக்டர்களுக்கு மொப்பெட் வண்டி கொடுக்கப்பட்டிருக்கிறது.

திருமணத்தைப் பற்றிக் கேட்டதும், ''இதுவரை அதைப்பற்றிச் சிந்திக்கவில்லை. எங்களையும் எங்கள் வேலையையும் நன்கு புரிந்து கொண்ட ஒருவரைத் தான் நாங்கள் திருமணம் செய்து கொள்வோம். இந்த வேலையில் கடுமையான பயிற்சி பெற்றுள்ளோம். இதை விடவே எங்களுக்கு மனம் வராது'' என்று முடிக்கிறார்கள்.

-கலா மூர்த்தி



இடமிருந்து வலமாக திருமதி எம்.எல்.வி, குமாரி லோசனா, அமைச்சர் அரங்கநாயகம்

# நகர்வலம்

தாய் தாலாட்டுப் பாடினாள். தொட்டிலில் படுத்திருந்த குழந்தை எழுந்து உட்கார்ந்து, ''அம்மா! என்னைக் கொஞ்சம் தூங்க விடறியா?'' என்று கேட்டது!

இந்த ஜோக் நிஜமாவதற்கு வாய்ப்புள்ள சாரீர வளமும் சங்கீத ஞானமும் கொண்ட தாய்மார்கள் இனிக் கவலைப்பட வேண்டாம். கேஸட்டில் ''தாலாட்டுப் பாடல்கள்'' பதிவாகி விட்டன. அதுவும் எம். எல். வி. அவர்களுடைய திவ்யமான குரலில்! அண்மையில் இதனை விழாவில் வெளியிட்டவர் கல்வி அமைச்சர் அரங்கநாயகம்

சுருதி ரெகார்டிங்கம்பெனி என்ற பெயரில் புதிய காஸெட் இசை நிறுவனத்தைத் தொடங்கியிருப்பவர் குமாரி லோசனா. பூனா திரைப்படக் கல்லூரியில் பயிற்சி பெற்ற இவர், இந்தியாவிலேயே முதல் பெண் சவுண்டு இன்ஜினீயர்.

பல புத்தகங்களைப் படித்துக் கடைசியில் டாக்டர் அழகப்பன் மிகுந்த ஆராய்ச்சிக்குப் பின் தொகுத்துள்ள தாலாட்டுப் பாடல்கள் நூலைத் தேர்ந்தெடுத்தார். இதிலிருந்து சிலவற்றைப் பாட வேண்டும் என்று எம். எல். வி.யை அணுகியபோது, மகிழ்ச்சியுடன் ஒப்புக்கொண்டதுடன், ஒரு பெண் என்பதாலோ என்னவோ, ரேட்டிலும் ரொம்பச் சலுகை காட்டினாராம். குமாரி லோசனாவின் அடுத்த முயற்சி ''நாட்டுப் பாடல்கள்'' அடங்கிய கேஸட்!

* * *

ஈழத்திலிருந்து எழுத்தாளர் டொமினிக் ஜீவா, கவிஞர் மேமன் ஆகியோர் வந்திருந்தனர். நர்மதா பதிப்பக அதிபர் ராமலிங்கம் வீட்டில் சில தமிழ் எழுத்தாளர்கள், கவிஞர்களைச் சந்தித்தனர்.

மேமன் குஜராத் மாநில கிராமம் ஒன்றிலிருந்து இலங்கையில் குடியேறிய முஸ்லிம் குடும்பத்தைச் சேர்ந்தவர். டொமினிக் ஜீவா, தமிழ் எழுத்தாளர்களுக்குத் தமிழ் நாட்டில் விட ஈழத்தில் மதிப்பு அதிகமாக இருப்பதாகக் கூறினார். அமைச்சர் தலைமை தாங்கும் விழாவானாலும் எழுத்தாளருக்குத் தான் முதலிடமாம்! பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம், தியாகராஜ பாகவதர் ஆகியோர் நினைவுநாளை இன்று கூட இலங்கை வானொலி மறக்காமல் அஞ்சலி நிகழ்ச்சி நடத்துகிறது. ஆனால் ஈழத்துப் பிரபல எழுத்தாளர் கைலாசபதியின் மறைவின் போது அவரைப் பற்றி ஒரு தமிழ்ப் பத்திரிகை கூட எழுதவில்லையே என்று குறைப்பட்டார்.

இலங்கையில் கோயில் விழாக்களில்கூட புதுக் கவிதைகள் அரங்கேறும் என்று பெருமைப்பட்டார் மேமன் கவி.

-சிக்கி

படங்கள்: உத்ரா

இடமிருந்து வலமாக மு. மேத்தா, கவிஞர் மேமன், டோமினிக் ஜீவா





# சைக்கிள் பேரணி '628'

"என்னடா சோமு நீ வரலியா?"

"எங்கே?"

"சோமாறி, சைக்கிள்பேரணிடா தமாஷா இருக்கும். வா."

"நான் வந்து என்ன செய்யறது?"

"இன்னுடா புரியாத முண்டமா இருக்கிறே. ஒரு நாள் ஜாலியா பொழுது போகும்டா வா."

"எனக்குப் பயமா இருக்குதுபா."

"என்னடா பயம்? இன்னிக்கு சைக்கிள்ள கொடியை ஏத்திக்கினு நாம போறதைப் பார்த்து அவனவன் பயந்து ஒதுங்கிப் போவானுங்க."

"எங்கே போய்க் கூடறோம்?"

"சீரணி மேடைக்கு. அங்கே தலைவர் ஸ்பீச்சுக் கொடுப்பார்."

"அப்ப வா நாம குறுக்குப் பாதையில சீரணி மேடைக்குப் போயிடுவோம்."

"ஏன்டா, மண்டையில ஏதாவது மூளையோட பேசறியா? மீட்டிங்லே நமக்கு என்னடா வேலை? இதப் பாரு போற போது வழி பூரா, நாம கூவிக்னே போவணும். 'ஐயையோ காணுமே, கருணாநிதி காணுமே' அப்படின்னு இந்த வாரம் கூவணும்."

"இந்த வாரம் மட்டும் அப்படியா?"

"ஆமாம். இந்த வாரம் அ.இ.அ.தி.மு.க. சைக்கிள் பேரணியில போறோம். அதுனால இப்படி. அடுத்த வாரம் தி.மு.க. பேரணியில போறபோது எம்.ஜி. ஆரைத் திட்டிக்கினு போவணும்."

"இப்பத்தான் எனக்குக் கொஞ்சம் தேசிய உணர்ச்சியே வருதுபா."

"இளம்பு. நம்பர் போட்டுத் தொறந்து விட்டிருக்கிற கடை எதுனாச்சும் கண்ணுலே நுழைஞ்சு லேசா ஏத்திக்கினு போவோம். போற வர காருங்க, ஜனங்க, ஓட்டலுங்க, எது மேலே வேணு கல்லு இல்லு அடிச்சிக்கினே தமாஷா போவலாம். இன்னைக்கு நாமதான் ராஜா."

"இதோ வரேன்."

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600032. (Phone: 431643)

Assistant Editor: P.S. Mani Editor: K. Rajendran

வாழ்க்கையில்
சுவைகள் பல—
அவற்றில்
மிக இனிமையானது
ரஸ்னா!

அது மிகவும் சுலபம். ஒரு குழந்தைகூட அந்த தந்திரத்தைச் செய்துகாட்டலாம். நீங்கள் செய்யவேண்டியதெல்லாம் சர்க்கரை மற்றும் நீருடன் ரஸ்னாவைக் கலக்குங்கள். நிமிடங்களில் பானம் தயார். 32 டம்ளர் சுவைமிக்க குளிர்பானம் தயாரிக்க 2 பாட்டில்கள் சிரப் போதும். இதை இதர எந்த சிரப்/ஸ்குவாஷுடன் ஒப்பிட்டுப் பாருங்கள். மற்றவைகளைவிட ரஸ்னாவுக்கு பாதி விலைதான் ஆகிறது என்பதை உணர்வீர்கள்.




**ரஸ்னா**

**ஸாஃப்ட் ட்ரிங்க்**
**கான்ஸன்ட்ரேட்**
**சுவையானது!**
**சிக்கனமானது!**

தயாரிப்பவர்கள்: பயோமா இண்டஸ்ட்ரீஸ், அசர்வா, அஹமதாபாத் 380 016.
இவ்விடங்களிலும் கிடைக்கின்றது: குவைத், துபாய், பேஹ்ரின், மொரீஷியஸ், செய்ரோ, கார்டூம், டாக்கா, நெய்ரோபி, ஜெத்தா, ஓஸ்லோ, லண்டன்.

Mudra/PI/983 TAM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka

வேர்க்குரு
தாக்கும்
போது...

# ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர் மட்டுமே உடல் அரிப்பு மற்றும் எரிச்சலை நிறுத்து-கிறது உடனடியாக.

எப்போது வேர்க்குரு தாக்கினாலும் அதை முறியடிக்க உபயோகியுங்கள் ஜான்ஸன்ஸ் பரிக்லி ஹீட பவுடர். ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடரில் மட்டுமே நிருபணம் பெற்ற மருந்துக் கலவை அடங்கியுள்ளது. அது 3 வழிகளில் தீவிரமாக செயல் படுகிறது :

- □ பாக்டீரியா கிருமிகள் பெருகுவதைத் தடுக்கிறது.
- □ வியர்வையை உறிஞ்சுகிறது.
- □ உடல் அரிப்பு மற்றும் எரிச்சலுக்கு நிவாரணமளிக்கிறது உடனடியாக !






சந்தன மணத்திலும் கிடைக்கிறது

Johnson & Johnson

© J&J '83

OBM 9550 TM